# தேன் மலர்

(இறையருட் பாடல்கள்)



---

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தினரின்
'சமய நூல்கள் வெளியீட்டிற்கான உதவி'
திட்டத்தின் கீழ்
அவர்களின் நிதி உதவியுடன்
இந்நூல் வெளியிடப் படுகின்றது.

---

எம். வி. குமார்

முதல் பதிப்பு : ஜுலை 1988
பதிப்புரிமை : திரு. எம். வி. குமார்

சௌமி வெளியீடு
14, தென்ராயன் தெரு
மதுராந்தகம் - 603306

விலை ரூ. 10/-

அச்சிட்டோர் :
மேரேலால் பவர் பிரஸ்
10, ஹனுமந்த ராவ் ரோடு,
பாலாஜி நகர், சென்னை - 14.

ஸ்ரீ தேவி சரணம்

ஸ்ரீ தேவி ஸ்ரீ ஸந்நிதானம்

# மங்கள வாழ்த்து

அன்றமர்ந்த மலர்தான்—அமுதத்தேன் சுரக்கும்
அலர்மேல் மங்கையணி—அரும்பு மலர் தானிதுவே!
தேனூர் பூஞ்சோலை—திருவேங்கட மாமலையோன்
தேகமெலாம் மணம் பரப்பும்—தித்திக்கும் மலரிதுவே!
கவிஞர்கள் புனைவதெல்லாம்—கவிதைகள் தாம்
கவின் நயமாய் இனிப்பதுவோ—கலையாய தேன்மலரில்!
மகிழ மலர்ச் சோலை நிறை—மதுராந்தக நகரதனில்
மன்னுபுகழ் இளம் கவிஞர்—மதுரகவி குமார் என்னும்
இளம் கவியின் உள்ளத்தினில்—இன்னிசையாய் உருவாட
இந்த தெய்வமனம் பரப்பும் மலர்—இன்னமுதத் தேன்மலர்
தான்
அருள் சுரந்தாள் காளியவள்—அன்னவளே காளிதாஸன்
அருள் சுரக்கும் கவிதை தந்தாள்—அன்புக்குமார்—
தேவிபக்தன்
பாடிய பாமாலை—தேவிக்கு—பாசமுடனளித்த பூமாலை
பாரெல்லாம் போற்றிடவே—பால கவிஞர்—வாழிய
வாழிய—வாழிய!

"ஸ்ரீதேவி சரணம்"
44, தேரடி வீதி,
மதுராந்தகம்.
21 - 7 - 88

தேவி தாஸன்

# முன்னுரை

*கந்தர்வ கான ஜோதி—கலைமாமணி*

## கே. வீரமணி

எண்ணியதை அளிக்கின்ற ஏழுமலையான் திருவருளால் இந்த இசைமலர் நூல்வடிவாக நம்கையிலே மிளிர்கிறது. அன்னை அலர்மேல் மங்கத்தாயாரின் அன்புக் கருணையாலே இந்த "தெய்வப்பாடல்கள்"— 'தேன் மலராக' வெளி வந்துள்ளது.

இந்த இசை நூலில் உள்ள பாடல்களை எனது அன்பு நண்பர் கவிஞர் மதுராந்தகம் குமார் அவர்கள் அற்புதமாக எழுதியுள்ளார்கள். பக்தி மனமும் இசைநயமும் கொண்டு பாடல்கள் தெய்வீகமாக அமைந்துள்ளன. கவிஞரின் பாடல்களை நான் இசைக் கச்சேரிகளிலும் கேஸட்டிலும் பாடியுள்ளேன்.

இந்த இசைநூலை வெளியிட்டு ஆன்மீக சேவை புரிந்துள்ள திருமலை திருப்பதி தேவஸ்தான நிர்வாகிகட்கு எனது மனமார்ந்த நன்றி!

இனிமையான பாடல்கள் எழுதிய கவிஞருக்கு எனது உளம் கனிந்த பாராட்டுக்கள்!

திருவேற்காட்டில் திருவருள் புரியும் அன்னை கருமாரி யின் திருவருளும்,

நெமிலியிலே வரம் கொடுக்கும் அருள்மிகும் தேவி அன்னை பாலா திருபுர சுந்தரியின் பெருங் கருணையும்,

திருப்பதியில் நலம் கொடுக்கும் அலர்மேல் மங்கைத் தாயாரின் அருட்கடாட்சமும் இந்த வையமெலாம் பெருக வேண்டுகிறேன்.

பக்தியெனும் பயிர் செழித்து வளரட்டும் இசையெனும் தெய்வீக மணம் திசை எங்கும் வீசட்டும்.

சென்னை - 18
21 - 7 - 88

அன்பன்
கே. வீரமணி

# என்னுரை

எல்லாம் வல்ல 'ஸ்ரீதேவி'யின் தித்திக்கும் திருவருளாலே 'முத்தமிழ் முழங்கும் மூன்று கடல் முனையில் நின்று மோனத்தவம் புரியும் மோகனக் குமரி அன்னையின் அருளாலே அவளது பாடல் எளியேனின் உள்ளத்தில் முதலில் முகிழ்த்தது. அது முதல் இதுநாள்—வரை தோன்றியவைகளின் தொகுப்பே 'தேன் மலர்'. தங்கையின் அருளோடு அண்ணனின் பொருளும் (நிதியுதவி) அடியேனுக்குக் கிட்டியது, நடமாடும் தெய்வமாம் ஸ்ரீகாஞ்சி பரமாச்சாரியாரின் நல்லருளே. ஒரு நாள் எனது பாடல் தொகுப்பில் அவரின் அருட்பார்வை பட்டு தனது திருக்கரங்களை அசைத்து அகங்குளிர அடியேனை ஆசீர்வதித்தார்கள். திருவருளும் குருவருளும் ஒரு சேர துணை நின்று இன்று ஒரு நூலுக்கு என்னை சொந்தக்காரனுக்கியிருக்கிறது. எனது குல தெய்வமாம் திருப்பதி வெங்கடேஸ்வரரின் தேவஸ்தான நிதியுதவி மூலம் இந்நூல் வெளியாவது எனது பூர்வ புண்ணியமே! இளமை முதல் என்னை ஈன்றவளின் இன்குரல் மூலம், இசையின் பால் நான் ஈர்க்கப்பட்டேன்

இந்நூல் வெளிவர பெரிதும் உதவிய திருப்பதி திருவேங்கடவன் கலைக் கல்லூரியின் ஓய்வு பெற்ற இயற்பியல் ஆசிரியரும் எனது மரியாதைக்குரியவருமான பெரியவர் ஸ்ரீ. அ. நடராஜன் அவர்களுக்கும், மங்கள வாழ்த்தும், அழகிய அட்டைப்படம் அழகுற அமைத்துத் தந்தவரும், என்னை 'கவிஞர்' என அன்பாக அழைக்கும் பெரியவருமான ஸ்ரீதேவிதாஸன் அவர்களுக்கும், முன்னுரை வழங்கிய ஸ்ரீ வீரமணி அவர்களுக்கும், என்னை இசையுலகுக்கு

கந்தர்வ கான ஜோதி-கலைமாமணி-ஸ்ரீ வீரமணி-ஸ்ரீசோமு-அவர்கள் மூலம் அறிமுகப் படுத்திய என் உடன் பிறவா சகோதரர் இசைக்கவிச் செம்மல் நெமிலி எழில் மணி அவர்களுக்கும், எனது எழுத்தார்வத்தையும், இசையையும் பாராட்டி என்னை ஊக்குவிக்கும் எனது நண்பர்களும், அன்பர்களுமான திருவாளர்கள் T. S. பத்மனுபன், V. சேதுராமன் 'இலக்கிய வீதி' இனிய வன் கவிஞர் S. ரகுவீரன், P. M. முத்துகுமரப்பா, கவிஞர் கள் மலர்மகன், தாராபாரதி, கே. வெங்கடேசுரவி, எழுத்தாளர்கள் சு. சமுத்திரம், மது. ராஜேந்திரன், எஸ். குமாரகிருஷ்ணன், கே. ஜி. ஸ்ரீதுரை, இளந்திரையன் மாம்பலம் N. சீனுவாசன், மற்றும் எனது அன்புச் சகோதரி திருமதி சித்ரா மாணிக்கம் ஆகியோருக்கு என் நெஞ்சார்ந்த நன்றிகள் என்றும் உண்டு.

எனது மானசிக சங்கீத சத்குருவான 'பத்ம ஸ்ரீ' இசைமணி' அமரர் சீர்காழி எஸ். கோவிந்தராஜன் அவர் களை இந்த நேரத்தில் போற்றி நிற்கிறேன்.

இந்த 'தேன்மலரில்' வெளியாகியுள்ள பாடல்கள் பல இன்றைய இசை வித்வான்களால் பாடப் பெற்றுள்ளன. எஞ்சியவைகளுக்கு நானும் இசையமைத்து பல நிகழ்ச்சி களில் பாடி வருகிறேன்.

இந்நூல் அழகிய வடிவில் உருவாகக் காரணமான எனது சகோதரர்கள் ஸ்ரீ P. V. ராதாகிருஷ்ண சாஸ்திரி கள் திரு எம். வி. மணி சாஸ்திரிகள் அவர்களுக்கும் என் மனமார்ந்த வந்தனங்கள். இந்நூலை அழகாக அச்சிட்டு வழங்கிய 'மேரேலால் பவர் பிரஸ் மேலாளர் திரு. ஜான்

அவர்களுக்கும் எனது நன்றியினை மகிழ்ச்சியுடன் செலுத்து கிறேன்.

இந்நூலுக்கு நிதியுதவி அளித்த திருமலை திருப்பதி தேவஸ்தான 'சமய நூல் வெளியீட்டுக்குழு' அன்பர்களுக்கு என் மனமார்ந்த நன்றிகள்.

என்பால் அன்பு செலுத்தும் அனைத்து உள்ளங்களுக்கும் தமிழிசை வளர்க்கும் இசைக் கலைஞர்களுக்கும் 'தேன்மலர்' ஒரு அன்புக் காணிக்கை.

அன்பன்
எம். வி. குமார்



# பொருளடக்கம்

## அற்புதமே நிகழ்த்தும் பொற்பத கணபதி

அற்புதமே நிகழ்த்தும் பொற்பதகணபதி—உன்
கற்பகக் கழலன்றி வேறே எதுகதி
—அற்புதமே

மூலப்பொருள் சொன்ன வேலனின் அண்ணனே
முதற்பொருளாகி நிற்கும் வல்லபை மன்னனே
—அற்புதமே

வேழமுகத்தாலே வேலனின் திருமணம்—அருள்
வேண்டும் மனத்தினிலோ நீயே நறுமணம்
ஆறுமுகன்போலே உனக்குமே இருதாரம்—என்றும்
அலையாமல் வாழ்வளிக்க இருக்கு உன் பாதாரம்
—அற்புதமே

அரச மரத்தடியில் அழகாய் உன் வீடு—அதுவே
அனைவருக்கும் அருள்தரும் திருவீடு
தாய்தந்தை உலகமென்று சொன்னது உன்வாக்கு
தரணியைக் காப்பதுவோ தலைவா உன் செல்வாக்கு
—அற்புதமே

—: o :—

## வேழமுகத்தவனே விக்ன விநாயகனே

வேழ முகத்தவனே விக்ன விநாயகனே
வினைகளெல்லாம் களைவாய் வேலவனின் சோதரனே
—வேழ

பானை வயிற்றோனே பக்தர்களைக் காப்பவனே
யானை முகத்தோனே தீவினையைக் களைபவனே
—வேழ

மூத்த பிள்ளையாகி முழுமுதற் கடவுளானாய்
காக்கும் கடவுளாகி கணபதி நீயானாய்
தாய்தந்தை உலகமென்று தரணிக்குச் சொன்னவனே
தாயாகி நின்றுநீ தரணியை ஆள்பவனே
—வேழ

—: o :—

## பிரணவத்தின் வடிவான நாயகனே

பிரணவத்தின் வடிவான நாயகனே—புகழ்
பெருகிட அருள்தரும் தூயவனே.

—பிரணவத்தின்

அம்மையப்பன் முதற்பிள்ளையாகி வந்தவா—இந்த
அவனிக்கு முதலாகி வந்து நின்றவா

—பிரணவத்தின்

ஆற்றங்கரையும் குளக்கரையும் உனதுவீடப்பா—நல்
அடியவர்கள் குடிபுகவே அன்புவீடப்பா
ஔவை தந்த உனது அகவல் அழகு ஏடப்பா—அதை
அன்றாடம் பாடவைப்பது உந்தன் பாடப்பா

—பிரணவத்தின்

—:o:—

# கணபதி துணைதன்னை நீநாடுவாய்

கணபதி துணைதன்னை நீ நாடுவாய்—நல்ல
குணநிதி அருள் வேண்டி நீ பாடுவாய்
—கணபதி

அவனுள்ள இடமெங்கும் அருகிருக்கும்—அதை
அன்றுடம் நாம் சார்த்த கனிவிருக்கும்
—கணபதி

ஆவணி சதுர்த்தியில் காத்திருப்பான்—நல்
அப்பமுடன் பொறி கடலை கேட்டிருப்பான்
ஔவையின் அகவலிலே மகிழ்ந்திருப்பான்—அதை
அன்றுடம் பாடும்மனம் வாழ்ந்திருப்பான்
—கணபதி

ஆற்றங்கரை குளக்கரையில் வீடிருக்கும்—அவனை
அண்டிய பேர்களுக்கு வாழ்வினிக்கும்
சித்தியொடு புத்தியென இருதாரம்—நல்ல
பக்தியுடன்—கும்பிட காக்குமவன் பாதாரம்
—கணபதி

# அவனிக்கு அருந்துணை ஆனைமுக கணபதி

அவனிக்கு அருந்துணை ஆனைமுக கணபதி— நல்
அருட்பாவில் தனைமறந்து அருளிடும் குணநிதி
—அவனிக்கு

அப்பழுடன் பொறிகடலை சேர்த்தே கேட்டிடுவான்
ஆர்வமுடன் உண்டுமனம் நிறைந்தே களித்திடுவான்
—அவனிக்கு

ஆவணி சதுர்த்தியில் அழகனின் பிறப்பு—அவன்
அனைத்திற்கும் முதலாகி நிற்பதும் சிறப்பு
அவன் புகழ் தினம்பாட அனைவர்க்கும் விருப்பு—அதை
அன்போடு நாம்செய்ய பறந்திடும் வெறுப்பு
—அவனிக்கு

காணும் இடமெங்கும் அவனது கம்பீரம்—நாம்
காணும் போதெல்லாம் குறையாது ஒய்யாரம்
அழகோடு அருள் சேர்க்கும் புகழாரம்—என்றும்
அமைந்திடும் அவனுக்கு மணியாரம்
—அவனிக்கு

—: o :—

# சங்கரனின் திருமகனே ஐங்கரனே

சங்கரனின் திருமகனே ஐங்கரனே—உயர்
சங்கடங்கள் தீர்த்தருளும் வேழமுகனே

—சங்கரனின்

ஞாலத்தின் முதலாகி வந்து நின்றவர்—எந்த
காலத்தும் துணையாகி காத்து நிற்பவா

—சங்கரனின்

பல்லொடித்து பாரதத்தைப் பாடி நின்றவர்—இந்தப்
பாரதம் செழித்திடவே பவனிவருபவா
அகவலில் அகம்மகிழ்ந்து தனைமறந்தவா—ஔவை
கிழவிக்குக் கைலாயம் காட்டிநின்றவா

—சங்கரனின்

ஓமெனும் ஓங்காரம் உன்னுருவமே—மனிதர்
ஓயாமல் புகழ்பாட மகிழும் தெய்வமே
சித்திபுத்தி தனைமணந்து சிறந்த தெய்வமே—நல்ல
பக்தியுடன் சித்தியையும் சேர்க்கும் தெய்வமே

—சங்கரனின்

—: o :—

# ஆறுமுகன் அழகைக் காண வாருங்கடி

ஆறுமுகன் அழகைக்காண வாருங்கடி—அவன்
ஆனைமுகன் ஆசைத் தம்பி பாருங்கடி
அழகு தாமரை மீதுவந்த வேலனடி—அவன்
ஆறுகன்னியர் அள்ளியெடுத்த அழகனடி.
—ஆறுமுகன்

கனிக்காக வலம்வந்த சிறுவனடி—ஞான
கனியாக மலையில்நின்ற முருகனடி
வள்ளிகுஞ்சரி மணமுடித்த வள்ளலடி—அவன்
அருளைஅள்ளி பாயவிடும் வெள்ளமடி.
—ஆறுமுகன்

தமிழ்ப் பாட்டில் தனைமறக்கும் தலைவனடி—அவன்
தத்தி தத்தி நடனமாடும் குழந்தையடி
அழகுதண்டை சிலம்புகொஞ்சும் கால்களடி—நமை
அன்றுடம் வாழவைக்கும் வேல்களடி.
—ஆறுமுகன்

ஆறுபடை வீடதனில் கோயிலடி—அவன்
ஆறுதலை தந்தருள்வான் பாடுங்கடி
ஏறுமயில் மீதிலவன் கோலமடி—அவன்
என்றும் அருளை தந்தருள்வான் வேண்டுங்கடி.
—ஆறுமுகன்

—: 0 :—

## கந்தனின் புகழ்பாடும் கன்னித்தமிழே

கந்தனின் புகழ்பாடும் கன்னித்தமிழே—நல்ல
சந்தத்தில் கவிவளர்க்கும் தனித்தமிழே

—கந்தனின்

அருணகிரி திருப்புகழில் அருந்தமிழே—இந்த
அவனியை வலம்வந்த பெருந்தமிழே

—கந்தனின்

புலவர்கள் போற்றிவரும் புதுத்தமிழே—நல்ல
கவிஞர்கள் கவிசிறக்க வரும்தமிழே
நக்கீரர் மனம்நிற்கும் நறுந்தமிழே—முனிவர்
அகத்தியர் அகம்மகிழ்ந்த அன்புத்தமிழே

—கந்தனின்

தேனினும் இனித்திடுவாய் தெள்ளுதமிழே—தமிழர்
கள்ளமிலா உள்ளத்தை அள்ளுதமிழே
அன்புடன் அழைப்பவரை கொள்ளு தமிழே—எங்கள்
சேக்கிழார் சேர்த்துவைத்த பிள்ளைத்தமிழே

—கந்தனின்

—: o :—

## அமுதமதில் சிறந்ததுதான் தமிழல்லவா

அமுதமதில் சிறந்துதான் தமிழல்லவா—அதுவே
இசைவடிவில் கந்தன் பெருமை சொல்லுமல்லவா
தீந்தமிழில் தனைமறக்கும் முருகனல்லவா—அருள்
திருப்புகழில் இனிப்பவனும் குகனல்லவா

—அமுதமதில்

தமிழோசை தினம்கேட்கும் கடலல்லவா—செந்தில்
வேலவனும் அருள்வழங்கும் கடலல்லவா
சூழும்வினைகள் வேரறுக்கும் வீரனல்லவா—வெற்றி
வேலெடுத்து போர் புரிந்த தீரனல்லவா

—அமுதமதில்

கந்தரனுபூதி நமக்குக் கனிகளல்லவா—சஷ்டி
கவசம் பாட துயர்களையும் தூயனல்லவா
அலங்காரம் கலிவெண்பா அமுதமல்லவா—நம்
அகங்காரம் தனைதுடைக்கும் தலைவனல்லவா

—அமுதமதில்

—: o :—

## உனைப்போற்றி சிறந்திட தமிழ் நன்றுதான்

உனைப்போற்றி சிறந்திட தமிழ் நன்றுதான்
—முருகா
உன்மனம் உருகிடுமே எனக்கென்றுதான்
—உனைப்போற்றி

தமிழோசை தினம் கேட்கும் படைவீட்டில்தான்
—அது
அமிழ்தான திருப்புகழைத் தரும் பாட்டில் தான்
—உனைப்போற்றி

குறவள்ளி மனமென்றும் உனக்காகத்தான்—அது
குதித்தாடும் உன் புகழைத் தினம் கேட்கத்தான்
அசைந்தாடும் காவடிகள் எத்திக் குந்தான்—அது
எந்நாளும் பார்ப்பவர்க்குத் தித்திகுந்தான்
—உனைப்போற்றி

மலைமீது மயிலாடும் உன்னழகிலே—அழகு
கலையாவும் விரித்தாடும் தன்னழகிலே
சேவலும் உன்கையில் கொடியானதே இந்த
அழகெல்லாம் சேர்ந்திடஓர் நொடியானதே
—உனைப்போற்றி

—: o :—

# வேல் முருகா என்று சொன்னால்
# மால் மருகன் வருகிறான்

வேல்முருகா என்று சொன்னால் மால்மருகன்
வருகிறான்—திரு
மால்மருகா என்று சொன்னால் வேல்முருகன் வருகிறான்
நால்வேத பொருளதனில் நாதமாகி நிற்கிறான்—உயர்
வேதமதன் பொருள் சொல்லி நாதனாகி நிற்கிறான்
—வேல்முருகா

ஆறுதலை வேண்டி நின்றால் ஆறுமுகன் வருகிறான்
ஆடுமயில் மீதமர்ந்து அசைந்து ஆடி வருகிறான்
அம்மையப்பன் உடனிருந்து அழகுகாட்சி தருகிறான்
ஆறுபடை வீடுகொண்டு அருளை அள்ளித்தருகிறான்
—வேல்முருகா

செந்தூரின் கடலோரம் வேலெடுத்து ஆடுவான்—நம்
சிந்தையிலே கோயில்கொண்டு அனுதினமும் நாடுவான்
திருப்புகழாம் தேனதனை தினம் தினமும் தேடுவான்
தித்திக்கும் தமிழ்பாடும் அன்பர் மனம் கூடுவான்
—வேல்முருகா

—: o :—

## நீலவானின் அழகைக்கண்டு மயிலும் தோகை விரிக்குது

நீலவானின் அழகைக்கண்டு மயிலும்தோகை
விரிக்குது
வேலெடுத்த முருகன்அழகில் சேவற்கொடியும்
பறக்குது
—நீலவானின்

மலையதனைக் கண்டவுடன் முருகன் முகம் சிரிக்குது
முத்துதிருப் புகழைக்கேட்டு அடியாரை வாழ்த்துது
—நீலவானின்

கந்தனவன் கருணையிலே அலங்காரம் பேசுது—நல்ல
சந்தமுள்ள ஆற்றுப்படை தமிழ்மணத்தை வீசுது
அருணகிரி அனுபூதி திருப்புகழாய் இனிக்குது
ஔவை தந்த அருந்தமிழில் ஆறுமுகம் களிக்குது
நீலவானின்

—: o :—

## முருகா நீ இன்னும் ஒரு சிறுபிள்ளையா

முருகா நீ இன்னும் ஒரு சிறுபிள்ளையா—மால்
மருகா நல்லருள் புரியும் பழமில்லையா

ஞானப்பழமில்லையா

—முருகா

அன்பர்களை அழைப்பதுந்தன் அழகல்லவா—நன்
பரிவோடு அணைக்கும் உன் கையல்லவா
அண்டினால் துயர்துடைக்கும் வேலல்லவா—உன்
அடிபணிந்தால் அருள்வழங்கும் காலல்லவா

—முருகா

மகிழ்வோடு உனை தாங்கும் மயிலல்லவா—செந்தில்
கடலோரம் வந்தது சேவற்கொடியல்லவா
அருளோடு பொருள்வழங்கும் வீடல்லவா—தினம்
அடியாரை காப்பதுந்தன் பாடல்லவா

—முருகா

—:o:—

# கந்தனை நாடு கன்னித்தமிழ் பாடு

கந்தனை நாடு கன்னித்தமிழ் பாடு
வந்தனை செய்துநீ வாயாரப் புகழ்பாடு
—கந்தனை

வணங்கிடும் அடியவர்கள் நெஞ்சம் சொந்தமே
வாழ்த்தித் துதிப்பவர்க்கு அருளும் சொந்தமே
—கந்தனை

புள்ளி மயில்மீது துள்ளியே வருவான்
வள்ளி குஞ்சரியின் மனதினில் நிறைவான்
கூர்வேல் கொண்டு குறைகளை களைவான்
கும்பிட்டு பணிந்தாலே குணமெலாம் நிறைவான்
—கந்தனை

கந்தனின் கழலடியில் சந்தங்கள் உறவாடும்
சந்தங்கள் அசைவினிலே ராகங்கள் உருவாகும்
தீந்தமிழ் சுவையினிலே திருப்புகழ் உறவாடும்
தினம்தினம் நாம்பாட துன்பங்கள் பறந்தோடும்
—கந்தனை

—:o:—

## வடிவேலன் வேல்வந்து மொழிதந்தது

வடிவேலன் வேல்வந்து மொழிதந்தது—அது
அருணகிரி திருநாவில் புகழ் தந்தது
திருப்புகழ் தந்தது
—வடிவேலன்

காலையிளம் வேளைதன்னில் சேவல் வந்தது—அது
கந்தா—கந்தா என்றே பாடிவந்தது
வண்ணமயில் தானும்அங்கே ஓடி வந்தது-அது
எண்ணமெல்லாம் கந்தனென்றே ஆடிநின்றது
—வடிவேலன்

நீலக்கடல் அலையெல்லாம் அசைந்து வந்தது—அது
நீலமயில் கந்தன் எழில் காண வந்தது
சோலைமலர் கூட்டமெல்லாம் தேடிவந்தது—அது
சோலைமலை கந்தன்புகழ் பாடி நின்றது
—வடிவேலன்

—: o :—

## புள்ளி மயில் வேலன் கையில்

புள்ளி மயில் வேலன் கையில்
துள்ளி வரும் வேலிருக்க
வேதனைதான் உனக்கேது மனமே—ஒரு
சோதனைதான் வந்திடுமோ தினமே

—புள்ளி

செந்தமிழின் ஓசை கேட்டு
செந்தில் வேலன் வந்திடுவான்
சத்தியமாய் வணங்கிடுவாய் மனமே-ஒரு
சஞ்சலம்தான் வந்திடுமோ தினமே

—புள்ளி

வள்ளிமலை மீது வேலன்
வள்ளியுடன் கூடி நின்றான்
வாரிதினம் வழங்கிடுவான் அருளை—தினம்
வாழ்த்துப்பாடி வணங்கிடுவாய் அவனை

—புள்ளி

—: o :—

## முப்போதும் முருகன் நாமம் முழங்கு

முப்போதும் முருகன் நாமம் முழங்கு
எப்போதும் தமிழ் இசையாய் வழங்கு
சங்கத் தமிழ் கந்தனவன் வருவால்
சங்கரனின் துணை நின்று அருள்வான்

—முப்போதும்

வேலென்றும் அவன் கையில் உண்டு
தினம் வணங்கிடுவாய் நீ அதனைக் கண்டு
குறைவில்லா வாழ்வு தர வேண்டு :
குகன் அருளோ நிறைவாக உண்டு

—முப்போதும்

அழகான நிலம் ஒரு பரப்பு
அவன் ஆக்கி வைத்ததே இந்த விரிப்பு
குமரனவன் முகம் என்றும் சிரிப்பு
மனம் கண்டவுடன் பெற்றிடுமே களிப்பு

—முப்போதும்

—: o :—

## பைந்தமிழ்ப் பாட்டதனை பக்குவமாய் நீபாடு

பைந்தமிழ்ப் பாட்டதனை பக்குவமாய் நீபாடு
பக்கதுணை அவன்வருவான் பாங்கான வேலோடு
மனமுருகி அவன்புகழை அனுதினமும் நீபாடு
மால்மருகன் அருளாலே உனக்கில்லை ஒருகேடு
—பைந்தமிழ்ப்

குன்றமது நீசென்றால் குறையேதும் உனக்கில்லை
குமரனவன் முகத்தினிலோ அழகிற்கும் குறைவில்லை
பக்தியுடன் படியேற பாவங்கள் உனக்கில்லை
பாரினைக் காத்திடுவான் சந்தேகம் இனியில்லை
—பைந்தமிழ்ப்

வேலினை வணங்கிடவே வேண்டுதலை அளிப்பான்
வேழமுகன் தம்பியாகி வேதங்கள் பாடிடுவான்
நீதியின் முதலாகி நிர்மலனாய் இருப்பான்
நித்திய சுகம்தந்து சத்தியம் காத்திருப்பான்
—பைந்தமிழ்ப்

—: 0 :-

## ஆண்டியின் திருக்கோலம் பழநியப்பா

ஆண்டியின் திருக்கோலம் பழநியப்பா—நல்
அடியார்க்கு அருள்ஞானப் பழம் நீயப்பா
—ஆண்டியின்

கனிவேண்டி வலம்வந்த பழநியப்பா—நல்
அருள்வேண்டும் உள்ளத்திற்குப் பழம் நீயப்பா
—ஆண்டியின்

ஆறுபடை வீடமர்ந்து ஆறுதல் தந்தவா
வேறுபடு தீமைகளை மாற்றி நின்றவா
வேலோடு மயிலினையும் ஆட வைத்தவா
வேதனைகள் தீர்த்திடவே கோயில் கொண்டவா!
—ஆண்டியின்

—: o :—

## செந்தூரின் கடலலையும் தமிழ் பாடுது

செந்தூரின் கடலலையும் தமிழ்பாடுது—திருச்
செந்தூரான் புகழ்தன்னைத் துதிபாடுது
—செந்தூரின்

கரையோரம் வீசும் தென்றல் இசைபாடுது—அது
கந்தன் எந்தன்தலைவன் என்றே புகழ்பாடுது
—செந்தூரின்

வேலவனின் புகழ்பாடி வேலும் வருகுது—அது
வேதமயமான கந்தன் பதமும் நாடுது
மன்னவனின் எழில்கண்டு மயிலும் ஆடுது—அது
மனமெங்கும் மகிழ்ச்சியாக வழியும் சொல்லுது
—செந்தூரின்

—: O :-

## வாழ்வினில் சீர்பெருக்கும் ஒரு கோட்டம்

வாழ்வினில் சீர்பெருக்கும் ஒருகோட்டம்—அது
வண்ண வடிவேலவனின் கந்தகோட்டம்
—வாழ்வினில்

நிலையான வாழ்வினுக்கோர் அவன்புகழ் நாட்டம்
நில்லாது தீவினைகள் அவன்எதிர் ஓட்டம்
—வாழ்வினிலே

மனமெனும் தோணியும் ஒருசிறு கோட்டம்—நல்
மகிழ்வான நினைவினிற்கே தினம்தினம் நாட்டம்
மால்மருகன் புகழ்பாட வரும்தினம் ஏற்றம்—தினம்
மன்றாடி துதிப்பவர்க்கு வரும் நல்ல மாற்றம்
வாழ்வினில்

—: ɵ :—

## கோடிமுறை பாடிஉனைத் தேடிநிதம் பணிந்தேன்

கோடிமுறை பாடி உன்னைத் தேடிநிதம் பணிந்தேன்
ஓடி வந்து அருள்வாய் உத்தமனே—முருகா

—கோடிமுறை

மண்ணில் மலர்வதெல்லாம் உன் திருப் பாடலே
மாந்தர் தினம் மகிழ்ந்திடவே உன்திரு ஆடலே
தெய்வயானை மணம்புரிந்த தேவாதி தேவனே
தேனான தமிழ்ப்பாட்டின் தேனிசை நாதனே

—கோடிமுறை

வேலவனைத் தாங்கிடவே மயிலுமுண்டு—நம்
வேதனைகள் தீர்த்திடவும் வேலுமுண்டு
குமரனை ஏந்திடவே குன்றமுண்டு—நம்
குறைகளைக் களைந்திடவே குமரனுண்டு

—கோடிமுறை

—: o :—

## வணங்கினால் வரமருளும் வடதிருச்சிற்றம்பலம்

வணங்கினால் வரமருளும் வடதிருச்சிற்றம்பலம்
வடிவேல் திருக்குமரன் மயில்மேல் திருக்கோலம்
—வணங்கினால்

பிரணவத்தின் பொருள்கேட்ட ஈசனே வலப்பக்கம்
பிறவிப்பிணி அறுக்கும் பொய்கையும் வலப்பக்கம்
—வணங்கினால்

நானிலம் சிறந்திட நான்மறை வளர்ந்ததலம்
நாரணனன் ராமனாய் ஏரியைக் காத்ததலம்
திருவெண்காடு என்ற சைவ திருத்தலம்
வைணவம் வளர்ந்திடும் வகுளாரண்ய தலம்
—வணங்கினால்

—: o :—

## முருகனை முதல்பாட தமிழ் வந்தது

முருகனை முதல்பாட தமிழ் வந்தது—அது
முத்தான இசைதன்னை தினம் தந்தது

—முருகனை

துள்ளிவரும் பகைதன்னை வேல்வென்றது—அழகு
புள்ளிமயில் துணையாக அது நின்றது

—முருகனை

அழகனின் இருப்பிடமோ மலையானது—அதில்
அன்பெனும் திருவுருவம் சிலையானது
அருளெனும் திருக்கோலம் கலையானது—அதை
அன்புடன் தொழுவோர்க்கு நிலையானது

—முருகனை

மணமுடன் திருநீறு மருந்தானது—கந்தன்
மயில் மீது திருக்காட்சி விருந்தானது
அவனருள் நமக்கென்றும் துணையானது—அதை
அனுதினம் நாம் வேண்ட வழியானது

—முருகனை

—: o :—

# முருகனது திருமணமோ தங்கமானது

முருகனது திருமணமோ தங்கமானது—அவனை
முழுமையுடன் கும்பிடுவோர்க்குச் சொந்தமானது
—முருகனது

தெய்வயானை வள்ளியுடன் சேர்ந்துவருகிறான்—முருகன்
தேன்மணக்கும் தெய்வத்தமிழை அள்ளித்தருகிறான்
—முருகனது

வேலவனின் திருக்கரத்தில் வேலிருக்குது—அது
வேண்டிவரும் அடியார்கைகள் போலிருக்குது
கந்தனவன் எழிலைக்கண்டு மயிலுமாடுது—அருள்
தந்திடுவான் என்றுசொல்லி தினமும் கூடுது
—முருகனது

ஆடிமாதம் காவடிகள் கோடிவருகுது—அது
ஆடிஆடி அவன்புகழைப் பாடி வருகுது
மலையின்மீது அடியார்கூட்டம் சேர்ந்துவருகுது—மால்
மருகனவன் காட்சியைக்கண்டு உள்ளம்நெகிழுது
—முருகனது

—: o :—

# மூன்று தமிழிங்கே முதலானது

மூன்று தமிழிங்கே முதலானது—அது
முருகா உன்னருளாலே உருவானது
காவியம் தமிழ்கொண்டு இசையாகுது—அதைக்
காணாத மனமெல்லாம் வீணாகுது
—மூன்று

அருளோடு பொருள்சொல்லும் அனுபூதிதான்—அது
அழகாஉன் அருள்தேட பெரும்நிதிதான்
செந்தமிழ் புகழ்பாடும் திருப்புகழ்தான்—அது
செந்தூரின் கடலோரம் தரும்புகழ்தான்
—மூன்று

அடியாரின் குறைதீர்க்கும் படைவீடுதான்—முருகன்
அன்போடு குடியிருப்பான் அழகோடுதான்
மயில்மீது அமர்ந்திருப்பான் கொடியோடுதான்—அன்பர்
மனமோடு துணையிருப்பான் பரிவோடுதான்
—மூன்று

—: 0 :—

## ஆனைமுகனுக் கிளையவன்தான் ஆறுமுகமடா

ஆனைமுகனுக் கிளையவன்தான் ஆறுமுகமடா—அவன்
அமுத தமிழில் பாடல் கேட்கும் அழகுதெய்வமடா
ஆறுபடை வீடமர்ந்த அன்புதெய்வமடா—முருகன்
அருணகிரி புகழில் உலவும் இனிய தெய்வமடா
—ஆனைமுகனுக்

செந்தமிழில் இசைமுழங்கும் செந்தில் கடலடா—அது
செந்தில் வேலன் பதம்பணியும் பாங்கை பாரடா
சூரன் உடல் மாய்த்துநின்ற வீரன்தானடா—சிவ
சுப்ரமண்யன் ஆகிநின்ற அழகை பாரடா
—ஆனைமுகனுக்

அன்னைஉமை தந்துநின்ருள் அழகுவேலடா—அது
அற்புதமாய் அழகன்கையில் நிற்கும்பாரடா
சிங்காரமாய் கோயில் கொண்ட சிக்கல் பாரடா—நம்
சிக்கல்நீக்க அவனை விட்டால் வேறுயாரடா
—ஆனைமுகனுக்

கோபம் தணிந்து மோகம்கொண்ட தணிகைமலையடா
—அருள்
தாகம் தீர்க்கும் தங்கரதம் பவனிபாரடா
வள்ளியுடன் தெய்வயானை வாழும் மலையடா—நாம்
வணங்கிடவே வரமருள வந்தமலையடா
—ஆனைமுகனுக்

—: o :—

## குருராஜ ராகவேந்திரர் திருநாமம்

குருராஜ ராகவேந்திரர் திருநாமம்—அது
அரு மருந்தாகித் தரும் பெரும் க்ஷேமம்

—குருராஜ

துங்கா நதிக்கரை தீரத்திலே—அருள்
மங்கா புகழ்சேர்க்கும் நாமத்திலே

—குருராஜ

ஆயிரம் அற்புதங்கள் நிகழும் மண்டபம்—நல்
பாயிரம் சொன்னாலே அருளும் மண்டபம்
மண்ணுமே மருந்தாகும் திருமண்டபம்—துளசி
கண்ணிலே அசைந்தாடும் பெரும் மண்டபம்

—குருராஜ

ஏகாதசி விரதம் மாசினை அகற்றிடும்—நல்ல
துவாதசி பாரணையில் போஜனம் கிடைத்திடும்
வாயார பாடிநிற்க வழியே பிறந்திடும்—தினம்
நாவார நாமம்சொல்ல நலமே பெருகிடும்

—குருராஜா

—:o:—

## அழகான ஒரு கோயில் மந்த்ராலயம்

அழகான ஒரு கோயில் மந்த்ராலயம்—பேர்
அருளாளன் குடிகொண்ட பெருமாலயம்
குருராக வேந்திரர் கருணாலயம்—அருள்
திருவாகி நமைகாக்கும் அருளாலயம்

—அழகான

தெய்வமாய் அவதாரம் கொண்டவரே—குரு
தேவாதி தேவரைப்போல் வந்தவரே
பிருந்தாவனம் தன்னில் அமர்ந்தவரே—குரு
பேரின்பம் தனைநமக்குத் தந்தவரே

—அழகான

துளசியின் நறுமணமாய் இருந்திடுவார்—வரும்
துன்பங்கள் தனையென்றும் நீக்கிடுவார்
பசிப்பிணி எல்லாமே போக்கிடுவார்—என்றும்
பணிவோடு வருவோரைக் காத்திடுவார்

—அழகான

—: o :—

## கலிகால தெய்வமே குருராகவேந்திரா

கலிகால தெய்வமே குருராகவேந்திரா—தம்
கலிதீர பணியாதார் புவிமீது மாந்தரா

—கலிகால

எழுநூறு ஆண்டுகள் குருநாதர் வாசமே—உமை
எப்போதும் துதிப்போர்க்கு நிறைவாகும் நேசமே

—கலிகால

பிறவியின் பயன்தருமே பிருந்தாவனம்—குரு
மறவாமல் தானருளும் பிருந்தாவனம்
மண்ணினை மருந்தாக்கும் உமதாலயம்—அருள்
விண்ணோரும் தினம்போற்றும் அருளாலயம்

—கலிகால

துங்கா நதிக்கரையில் ஒளிவீசுது—அது
மங்காமல் குருநாதர் புகழ்பேசுது
நினைத்ததும் திருநாமம் உருவாகுது—அதை
நித்தமும் உரைத்தாலே திருவாகுது

—கலிகால

—: o :—

## காமகோடி பீடம்கொண்ட கற்பகமே

காமகோடி பீடம் கொண்ட கற்பகமே—அன்னை
காமாட்சி தந்ததிரு காமதேனுவே—குருவே

—காமகோடி

ஞானபூமி கலவை தந்த அருள் நிலவே—என்றும்
நல்லாசி அளித்து வரும் திருவுருவே

காமகோடி

காவியுடை சுற்றிக்கொண்ட கருணைதெய்வமே—நல்ல
கமண்டலம் ஏந்திவரும் காருண்யமே
மோனத்தவம் புரிந்து வரும் மோகனமே—இந்த
ஞாலமென்றும் சிறக்கவந்த ஞான தீபமே

—காமகோடி

—: o :—

# கருணையின் திருவிளக்கு
# கலவையின் அருள்விளக்கு

கருணையின் திருவிளக்குக் கலவையின் அருள்விளக்கு
கற்பகமாய் அருள நம்முடன் துணையிருக்கு
—கருணையின்

மண்ணிலே குருவிளக்கு மகிழ்வினை தரும் விளக்கு
மங்கையவள் காமாட்சி மகிழ்ந்திடும் மனவிளக்கு
—கருணையின்

பரமகுருவாகி நின்று பணிவினை தரும் விளக்கு
பாரெல்லாம் பணிந்திடவே பாசத்தை தரும்விளக்கு
ஆண்டவன் பெயர்சொல்லி ஆசியை தரும்விளக்கு
அகிலமெல்லாம் செழிக்க வந்தகுரு மணிவிளக்கு
—கருணையின்

மோனத்தவம் புரியும் மோகனத் திருவிளக்கு
ஞானத் திருவடிவாய் நலம் தரும் குலவிளக்கு
சந்திர சேகர சரஸ்வதி எனும் விளக்கு
சந்ததம் பணிவார்க்கு சத்திய பெருவிளக்கு
—கருணையின்

—:o:—

# அருள் என்னும் திருப்பெயர் மூன்றெழுத்து

அருள் என்னும் திருப்பெயர் மூன்றெழுத்து—அதை
அளித்திடும் காஞ்சியும் மூன்றெழுத்து
முக்தியெனும் திருப்பெயர் மூன்றெழுத்து—குரு
பக்தியெனும் வழியும் மூன்றெழுத்து

—அருள்

அவனியில் ஆண்டவர் ஒருமூன்று—அது
அயன்மால் சிவனெனும் திருமூன்று
காமகோடி பீடத்திலும் குருமூன்று—அவர்
நாமம் சொல்லி செழிக்குமே ஞாலம்மூன்று

—அருள்

பக்தியெனும் பயிரும் மூன்றெழுத்து—அதைப்
பயிர்செய்யும் மனமும் மூன்றெழுத்து
சக்தியெனும் அருட்பெயர் மூன்றெழுத்து—அருள்
சாந்தியும் கொண்டது மூன்றெழுத்து

—அருள்

ஓம் எனும் ஓங்காரம் ஒருஎழுத்து—அது
ஓதியுணர்ந்திடப் பெரும் எழுத்து
சங்கரர் புகழ்பாடும் திருஎழுத்து—அது
மாற்றி அமைத்திடும் நம்தலையெழுத்து

—அருள்

—:o:—



3

# வானத்தில் உதித்தது முழுநிலவு

வானத்தில் உதித்தது முழுநிலவு—இந்த
வையகம் சிறந்திட குரு நிலவு
—வானத்தில்

சந்திர-சேகர சரஸ்வதியாம்—அவர்
இந்திரன் புகழினில் அருள் இணையாம்
சுந்தர வடிவினில் அவர் முகமே—அது
மந்திர உருவினில் வளர்முகமே
—வானத்தில்

ஜெயேந்திர சரஸ்வதி ஒருநிலவாம்—அவர்
ஜெயமே நிறைந்திடும் திருவுருவாம்
பாரதம் நிறைந்தது அருட்பணியில்—இங்கு
வேறெது இணையுண்டு இவர் பணியில்
—வானத்தில்

காலடி சங்கரர் காலடியில்—அவர்
பூவடி சிறந்திட ஒரு பிறவி
சங்கர விஜயேந்திர சரஸ்வதியாம்—அருள்
மங்களம் நிறைந்திடும் அருள் நிதியாம்
—வானத்தில்

—:o:—

# சமயத்தில் நிகழ்ந்தது சங்கர விஜயம்

சமயத்தில் நிகழ்ந்தது சங்கர விஜயம்—அது
இமயத்தின் புகழ் எட்டும் திருவிஜயம்
—சமயத்தில்

அன்னைத் தமிழ் மண்ணில் அருள் தாகம்—அதை
அவனியில் தீர்க்க வந்த அருள்மேகம்
—சமயத்தில்

மாலின் படைப்பினிலே அயன் விஜயம்—அந்த
அயன் தந்த படைப்பினிலே அகிலம் விஜயம்
சமயம் தழைக்க வந்த சங்கர விஜயம்—நல்
இமயத்தின் உயர்வான குரு விஜயம்
—சமயத்தில்

மூன்றுகுரு சேர்ந்தது திருக்காஞ்சி—அருள்
முக்தியும் அளித்திடும் திருக்காஞ்சி
காமகோடி பீடம் கண்ட திருக்காஞ்சி—அன்னை
காமாட்சி ஆட்சி செய்யும் அருட்காஞ்சி
—சமயத்தில்



# சிவமே உலகில் அன்பாகும்

சிவமே உலகில் அன்பாகும்—அதைத்
தினமே பணிவது பண்பாகும்

—சிவமே

உமையோ அவனில் ஒருபாதி—நல்
உளமே நிறையும் சிவஜோதி

—சிவமே

கயிலை மலையே அவன்வீடு—திரு
மயிலை வாழ்வான் அன்போடு
நால்வர் பாடிய தேவாரம்—வெகு
அழகாய் அமைந்த புகழாரம்

—சிவமே

ஆனை முகமாய் ஒருபிள்ளை—அழகு
ஆறு முகமாய் சிறுபிள்ளை
ஆடல்கலை பிறந்த இடம்தில்லை—இந்த
அவனியில் சிவன்போல் தெய்வமில்லை

—சிவமே

—:o:—

# கயிலை நாதனை நினைமனமே

கயிலை நாதனை நினைமனமே—திரு
மயிலை மேவிய மன்னனைத்—தினமே

—கயிலை

கற்பகத் தாயவளின் துணையவனே—என்றும்
கனிவாய் வரமருள்வான் தூயவனே

—கயிலை

ஐம்பெருந் தலங்களின் நாயகனும்—உண்மை
அன்பெனும் உள்ளங்களில் சேயவனும்
வெண்ணீறு பூசிய விலசடையன்—கங்கை
தண்ணீர் தலைகொண்ட பிறைதலையன்

—கயிலை

கபாலி திருக்கரத்தில் ஓடுண்டு—அவன்
கருணை முகத்தினிலே ஒளியுண்டு
நால்வரின் தேவார இசையுண்டு—நமக்கு
நலமே தினமருள மனமுண்டு

—கயிலை

—: o :—

## வங்கக்கடல் ஓரத்திலே தங்கமணி மாளிகை

வங்கக்கடல் ஓரத்திலே தங்கமணி மாளிகை
அன்னையவள் வசிக்கிறாள் அழகுடன் சிரிக்கிறாள்
முத்தமிழும் வாழுமிடம் முக்கடலும் சேருமிடம்
முகப்பான தோற்றத்திலே மோனத்தவம் செய்கிறாள்
—வங்கக்கடல்

பார்முழுதும் போற்றிடவே பாசமழை பொழிகின்றாள்
பாசத்தையும் அள்ளித்தந்து ஆசைகளை அழிக்கின்றாள்
ஆசைகளை அள்ளிவந்து அலைகளில் சேர்க்கின்றாள்
அலையாமல் வாழநல் வழிகளை வகுக்கின்றாள்.
—வங்கக்கடல்

கண்களுக்கு விருந்தாக கன்னியென வாழ்கின்றாள்
எண்ணத்திற்கு விருந்தாக இசையமுதைச் சுரக்கின்றாள்
பசையாக நின்றுஅங்கு விசையாக பாடிநின்றால்
அசையாமல் அங்கிருந்தே ஆசிமொழி கூறிநிற்பாள்
—வங்கக்கடல்

—: o :—

# வையமெலாம் புகழ்ந்து போற்றும் வைஷ்ணவி

வையமெலகம் புகழ்ந்துபோற்றும் வைஷ்ணவி
தேவியம்மா—எங்கள்
மதுராந்தகம் 'தேவி தாஸன்' வணங்கும் தாயம்மா
—வையமெலாம்

கலைகள்எல்லாம் மலைகள்போலே வளர்ப்பாய் நீயம்மா
அலைகள்போலே அலையும்மனதில் வருவாய் நீயம்மா
—வையமெலாம்

கருணைக்கடலே கற்பகத்தாயே கருவே நீயம்மா—இந்த
உருவைத்தந்து உலவவைத்த தருவே நீயம்மா
எழிலாய்க்கோலம் கொண்டேதினமும் வருவாய்
நீயம்மா—நல்
அழியாப்புகழை அவனியில்தந்து அருள்வாய் நீயம்மா
—வையமெலாம்

சங்குடன்சக்கரம் ஏந்தியேகோலம் தருவாய் நீயம்மா
பொங்கும்மங்களம் எங்கும்தங்கிட அருள்வாய் நீயம்மா
அலைபோல்அருளை அள்ளித்தருவது அனுதினக்
காட்சியம்மா
கலைமிகுவாகனம் அமர்ந்துநீயும் வருவதுசாட்சியம்மா
—வையமெலாம்

—:o:—

## ஸ்ரீதேவி சரணம் அம்மா

ஸ்ரீதேவி சரணம் அம்மா—எங்கள்
சிந்தையில் குடிகொண்ட சிங்கார ரூபிணியே
—ஸ்ரீதேவி

அண்டத்தின் ஆதாரம் என்தாயும் நீதானே
ஆடலும் பாடலும் நிறைந்தவள் நீதானே
ஆதிசேஷன் மலர்ப்பாதம் அனுதினம் உறைபவளே
அருள்கோதை நாயகியே கோமகளே என்தாயே
—ஸ்ரீதேவி

சங்குடன் சக்கரம் ஏந்திய திருக்கை
சஞ்சலம் தீர்த்திடும் சத்திய அருட்கை
மலைமகளைக்காண மனதினில் ஒரு வேட்கை
மனமார தொழுவதொன்றே இதுவே என் நம்பிக்கை
—ஸ்ரீதேவி

—: o :—

# திருமகளாம் ஸ்ரீதேவி குடிகொண்ட திருக்கோயில்

திருமகளாம் ஸ்ரீதேவி குடிகொண்ட திருக்கோயில்
திருவருளை அலைபோல அள்ளித்தரும் கலைக்கோயில்
—திருமகளாம்

பார்புகழும் பரந்தாமன் பவனிவரும் திருவீதி
பாவையவள் ஸ்ரீதேவி கொலுவிருக்கும் திருவீதி
—திருமகளாம்

ஸ்ரீதேவி சரணமெனும் சிங்காரத் திருவீடு
ஸ்ரீகண்ணன் பார்த்தனுடன் தேரோட்டும் திருவீடு
சித்திரைப் பௌர்ணமியில் ஸ்ரீதேவி முகம் மலரும்
நித்திரை கலைந்திடவே புஷ்பாஞ்சலி சேர்ந்துவரும்
—திருமகளாம்

புரட்டாசி மாதம்தனில் புண்ணியத் திருகாட்சி
அரசாட்சி செய்யுந்தேவி அழகுமகள் அருட்காட்சி
ஒன்பது நாட்களிலும் ஒய்யாரம் ஒளிவீசும்
ஓயாமல் துதிப்பவர்தம் மனமெல்லாம் அருள்வீசும்
—திருமகளாம்

—:o:—

## ஜகம்புகழும் ஜகன்மாதா திருக்கோயில்

ஜகம்புகழும் ஜகன்மாதா திருக்கோயில்—அது
'ஸ்ரீதேவி சரணம்' எனும் அருட்கோயில்

—ஜகம்

பரந்தாமன் தேரோடும் திருவீதி—அதில்
நிரந்தரமாய் கோயில் கொண்ட ஸ்ரீதேவி

—ஜகம்

ஸ்ரீதேவி அமர்ந்திருக்கும் ஸ்ரீசக்கரம்—அதை
வணங்கவரும் மாந்தர்தம் மனக்குறை போக்கும்
நீலவானின் நிலவுபோல அருள் ஒளிவீசும்—அவளை
நிம்மதியாய் தொழுதுநின்றால் கருணைவிழி அருள்வீசும்

—ஜகம்

—: o :—

# தேரோடும் வீதியிலே ஒரு வீடு

தேரோடும் வீதியிலே ஒருவீடு—நம்
தேனான "ஸ்ரீதேவி" அருள் வீடு
பாரோரின் நலன்காக்கும் புகழ்வீடு—நம்
பரந்தாமன் சோதரியின் திருவீடு
—தேரோடும்

எப்போது பார்த்தாலும் எழிற்கோலமே—நாம்
தப்பாமல் தொழுதிட்டால் அருள்கூடுமே
முக்காலும் நினைப்பவர்தம் துயர்போக்குமே—நமக்கு
எக்காலும் அவள்கருணை வழிகாட்டுமே
—தேரோடும்

எழிலான வாகனத்தில் திருக்கோலம்—நல்
ஒயிலான உடையினிலே அருட் கோலம்
தேவர்கள் நெஞ்சினிலே தவக்கோலம்—நம்
"தேவிதாஸன்" நினைவினிலே மணக்கோலம்
—தேரோடும்

—: o :—

# நெஞ்சினிலே அருள்மணக்கும் நவராத்திரி

நெஞ்சினிலே அருள்மணக்கும் நவராத்திரி—அது
நினைவோடு வலம்வருமே அருள்ராத்திரி
—நெஞ்சினிலே

கயிலைமலை நாதனுக்கோர் சிவராத்திரி—நல்ல
கலைவாணி கொலுவிருக்கும் நவராத்திரி
—நெஞ்சினிலே

மகிஷனை வதம் செய்யவந்தவள்தேவி—நல்ல
மலருடை தரித்தே மகிழ்ந்திடும்தேவி
மஞ்சள் குங்குமத்தில் மலர்ந்திடும்தேவி—நல்ல
மாசற்ற அன்பினிலே நிலைத்திடும் தேவி
—நெஞ்சினிலே

நெமிலியில் தாய்வீட்டில் அழகிருக்கும்—அது
நெஞ்சார துதிப்பவர்தம் வினைபோக்கும்
கலையோடு இசைகூடி மணம்பரப்பும்—அது
கலைஞர்கள் நினைவினிலே நிலைத்திருக்கும்

—:o:—

# ஆடிவருகிறாள் அன்னை ஆடிவருகிறாள்

ஆடிவருகிறாள் அன்னை ஆடிவருகிறாள்—அன்பர்
பாடிவரும் புகழைக்கேட்டு ஓடிவருகிறாள்
—ஆடிவருகிறாள்

தேடிவருகிறாள் அன்னை நாடிவருகிறாள்—நம்
தேவைகளைத் தேனாய்மாற்றி தேடிவருகிறாள்
—ஆடிவருகிறாள்

ஆடிமாதம் அன்னையவளின் அழகு திருமணம்—அருள்
கூடிவரும் புனிதத்திருநாள் தேவி திருமணம்
பூத்துகுலுங்கும் மலராடை அன்பின் நறுமணம்—
என்றும்
காத்துநிற்கும் திருக்கரங்கள் தருமே நல்லதருணம்
—ஆடிவருகிறாள்

சிங்காரி கொலுவிருக்கும் சித்தரின்பீடம்—அது
ஓங்காரி உயர்ந்திருக்கும் உன்னதபீடம்
ஓம்சக்தி அன்னை நாமம் உலகினில் வேதம்—அது
ஒப்பாரி அவளைப்பாட உயர்ந்திடும் நாதம்
—ஆடிவருகிறாள்

—: o :—

# சக்தியுன் கோயிலில் சத்தியம் விளங்குது

சக்தியுன் கோயிலில் சத்தியம் விளங்குது—உனை
சந்ததம் தொழுவோர்க்குச் சங்கடம் விலகுது
—சக்தியுன்

மருவூரின் திருத்தலத்தில் மாதேவி நீசக்தி—மனம்
மகிழ்வுடன் கண்டாலே வளர்த்திடும் பக்தி
—சக்தியுன்

ஆடியின் திருப்பூரம் அன்னையுன் திருக்கோலம்
ஆயிரம் ஆயிரமாய் இருமுடிகள் அருட் கோலம்
கனிவுடன் உனைவேண்டிப் பெறுவார் தவக் கோலம்
களிப்புடனே தருவாய் உன்திரு மணக்கோலம்
—சக்தியுன்

ஓம்சக்தி திருநாமம் ஒலித்திடும் ரீங்காரம்
ஒரு முகமாய்த் தொழவே தொலைந்திடும் அகங்காரம்
அனுதினம் அம்மாஉன் அழகான அலங்காரம்
அதுவேஎன் வாழ்விற்கு அமைந்திடும் ஆதாரம்
—சக்தியுன்

—: o :—

# ஆடிமாத பூரத்தில் கோயில்அழகு கொஞ்சுது

ஆடிமாத பூரத்தில் கோயில்அழகு கொஞ்சுது
—அன்னை
ஆதிபரா சக்தியின் அருளேமனமும் கெஞ்சுது
—ஆடிமாத

அன்னையவள் பெயரைச்சொல்லி வலமும் வருகிறார்
—அன்பர்
தன்னைமறந்து தாயைக்கண்டு உள்ளம்மகிழ்கிறார்
—ஆடிமாத

புத்தம்புது மலர்கள்சரமாய் பூத்துக்குலுங்குது—அது
பூவையவள் மேனியில்பட்டுச் சிறந்துவிளங்குது
இருமுடிகள் இன்பமாக பவனிவருகுது—அன்னை
திருவடியைக் காணச்சொல்லி நன்மைதருகுது
—ஆடிமாத

அழகுமிகும் திருவுருவில் அன்னைவருகிறாள்—வந்து
அருள்வாக்கைச் சொல்லிநலமே அள்ளித்தருகிறாள்
அங்கவலம் காண கண்கள் கோடிவேண்டுமே
—என்றும்
அருளமுதைப் பருகிடவே அவளைநாடவேண்டுமே
—ஆடிமாத

—:o:—

# ஆயிரம் பெயரம்மா உந்தனுக்கு

ஆயிரம் பெயரம்மா உந்தனுக்கு—நீ
அன்புடன் வேல்தந்தாய் கந்தனுக்கு
சிவன்பாதி உடல்தந்தான் உந்தனுக்கு—எழில்
சிங்கத்தில் அமர்ந்தருள்வாய் எந்தனுக்கு

—ஆயிரம்

பாம்பென திருவுருவம் படைத்தவளே—எழில்
பார்த்திட திருவருளை கொடுத்தவளே
அழகுடன் புகழ்பாட வருபவளே—உயர்
அருளோடு பொருள்தன்னை தருபவளே

—ஆயிரம்

திருச்சாம்பல் நிறைந்து மருந்தாவாய்—நல்
திருவேற் காட்டினிலே விருந்தாவாய்
அழுதிடும் குழந்தைக்கு தாயாவாய்—உடன்
தொழுதிடும் அடியார்க்கு சேயாவாய்

—ஆயிரம்

வேப்பிலை மணத்திலே உடல்சிலிர்க்கும்—அருள்
வேதவல்லி குணத்தாலே வாழ்வினிக்கும்
செந்தமிழ் பாடலிலே பொருளினிக்கும்—நம்
செல்வமுத்து மாரியவள் புகழுரைக்கும்

—ஆயிரம்

—:o:—

## மாரியாய் வந்தருள்வாய் மாரியம்மா

மாரியாய் வந்தருள்வாய் மாரியம்மா—இந்த
பாரினில் வளம் தருவாய் நீயம்மா
—மாரியாய்

உனையன்றிக் கதிஎமக்கு யாரம்மா—என்றும்
உனைவேண்டும் அடியாரைப் பாரம்மா
—மாரியாய்

எல்லோர்க்கும் வாழ்வினிலே ஒளிநீயம்மா - தினம்
ஏங்கிடும் அடியார்க்குத் தாய்நீயம்மா
மகிழ்வான மனமென்றும் உனைத்தேடுது - அருள்
மழைவேண்டி நலஞ்சூழ உனைநாடுது
—மாரியாய்

மண்ணிலே மகிழ்வாக நிறைவாயம்மா - கடை
கண்ணிலே அருள்தேக்கித் தருவாயம்மா
விண்ணிலே முகில்சேர்த்து வருவாயம்மா - இந்த
மண்ணிலே மழைதன்னைத் தருவாயம்மா
—மாரியாய்

—: o :—

## நாரணி நின்புகழை நான்பாட வரம்தாராய்

நாரணி நின்புகழை நான்பாட வரம்தாராய்
பூரணிசங்கரி பூலோக நாயகியே

—நாரணி

வேலனின் தாயாகி வேண்டும்வரம் அருள்வாய்
வேதனை நீங்கிடவே வினைகளையும் களைவாய்

—நாரணி

நாதஸ் வரூபிணி நாரணன் சோதரி
நவகாளி ஓங்காரி நர்த்தனம் புரிவாய்நீ
சஞ்சலம் நீக்கிடவும் சரணங்கள் சொல்லிடவும்
சலங்கை ஒலியுடனே சஞ்சரிப்பாய் தாயே

—நாரணி

—:o:—

## மாநகர் மதுரையிலே அரசாட்சி செய்பவளாம்

மாநகர் மதுரையிலே அரசாட்சி செய்பவளாம்
மாலவன் சோதரியாய் மங்களமாய் வாழ்பவளாம்
ஈசனின் இடப்பாகம் இன்பமுடன் இருப்பவளாம்
நேசமுடன் வருவோரைப் பாசமுடன் காப்பவளாம்
—மாநகர்

மக்கள்குறை நீக்கிடவே மகிழ்வுடனே வாழ்ந்தாளே
மாங்காடு தனில்நின்று மாதவம் புரிந்தாளே
காஞ்சிமா நகரினிலே கருணையாய் அமர்ந்தாளே
கார்மேகம் புடைசூழ கற்பகமாய்த் திகழ்ந்தாளே
—மாநகர்

கல்லான மனங்களையும் கசிந்துருகச் செய்திடுவாள்
பொல்லாத ஆசைகளைப் பொடிப்பொடியாய்
ஆக்கிடுவாள்
குற்றம்குறை செய்திடினும் குழந்தையாய்
இருந்திடுவாள்
குங்குமமாய்ச் சிரித்திடுவாள் குமிழ்ச்சிரிப்பை
உதிர்த்திடுவாள்
—மாநகர்

—: o :—

# மகமாயி கொலுவிருக்கும் சமயபுரம்

மகமாயி கொலுவிருக்கும் சமயபுரம் - அன்பர்
மனம்குளிரத் தந்திடுமே கேட்கும்வரம்
வணங்கவரும் அன்பரையே காக்கும்கரம் - அது
வாழ்வையென்றும் சிறக்கச்செய்யும் அன்புக்கரம்
—மகமாயி

மஞ்சளிலே ஒளிர்விடுமே நிலவுமுகம் - மன
நிறைவோடு சிரித்துவந்து அருளும்முகம்
குங்குமத்தில் முகம்சிவந்து குளிரும்முகம் - இந்தக்
குவலயத்தைக் காத்து நிற்கும் அன்புமுகம்
—மகமாயி

பிறைகொண்ட சிவனோடு களிக்கிருள் - நல்ல
மறை கண்ட மகனோடும் இருக்கிருள்
சிறைகொள்ளும் உள்ளத்திலே வசிக்கிருள் - நல்ல
உறையாகி நமைஎன்றும் காக்கிருள்
—மகமாயி

-:0

## மகமாயி மனசுவச்சா எல்லாம் நடக்குமே

மகமாயி மனசுவச்சா எல்லாம் நடக்குமே - அவளை
மனமுருகி தொழுதாலே வினைகள்தீருமே
வேப்பிலையின் மணத்தினிலே வியாதிபோகுமே - நம்
வேழமுகன் தாயவளின் அருளும்சேருமே
—மகமாயி

புற்றினிலே பாம்பாகிப் புகழோடு வருவாள்
கற்றகவி சிறந்திடவே கவிமழையைப் பொழிவாள்
பம்பையின் நாதத்திலே படமெடுத்து வருவாள்
பக்கதுணையாய் வந்து பதமலரைத் தருவாள்
—மகமாயி

குங்குமத்தின் நிறத்தினிலே சிரித்திடுவாள் தேவி
குணமுடனே கும்பிட்டால் குறைதீர்ப்பாள் தேவி
வேலவனின் தாயான வேதவல்லி தேவி
வேண்டும்வரம் தந்திடவே விரைந்துவரும் தேவி
—மகமாயி

—:0:—

# அழகுருவில் அன்னை மனம் கொள்ளை கொள்ளுரு

அழகுருவில் அன்னைமனம் கொள்ளை கொள்ளுரு-அவள்
அழகுசிங்கம் மீதமர்ந்து பவனிவருகிரு
அடியார்கள் குறைதீர்க்க எண்ணம் கொள்ளுரு - நல்ல
அழகுநடை பயின்றுஅவள் ஆடி வருகிரு

—அழகுருவில்

அன்னையவளை ஆராதித்தால் அகம்மகிழுரு - அவள்
தன்னை தந்து அன்பையெல்லாம் அள்ளித்தருகிரு
வேப்பிலையில் மணமாகி வியாதிதீர்க்கிரு - அன்னை
வேதனைகள் தீர்க்கஎன்றும் விரைவில்வருகிரு

—அழகுருவில்

காப்புகட்டி பொங்கல்வெச்சா களித்துமகிழுரு - அவள்
கருணை எல்லாம் கடைக்கண்ணுல் அள்ளித்தருகிரு
பம்பைஉடுக்கை நாதத்திலே பறந்துவருகிரு—நல்ல
நாகவடிவில் வந்துநம்மைக் காக்கவருகிரு

—அழகுருவில்

—: o :—

# வேற்காட்டில் வாழ்பவளே

வேற்காட்டில் வாழ்பவளே வேப்பமரம் ஆனவளே
வேதனையைத் தீர்ப்பவளே வேலவனின் தாயவளே
குங்குமச் சிரிப்பினிலே குமிழ்ச்சிரிப்பை உதிர்ப்பவளே
குற்றம் குறை செய்தோரைப் பெற்றவளாய்ப்
பொறுப்பவளே
—வேற்காட்டில்

சிவநாதன் உமையவளே சிவசக்தி நாயகியே
சிங்கார எழிலுடனே சிங்கத்தில் அமர்பவளே
பம்பையின் நாதத்திலே படமெடுத்து ஆடிடுவாய்
பக்தர்களைக் காத்திடவே பறந்தோடி வந்திடுவாய்
—வேற்காட்டில்

கருவினிலே காப்பவளே கருத்தினிலே வருபவளே
கருணைமாரி பொழிபவளே கற்கண்டாய் இனிப்பவளே
நானிலம் மீதினிலே நல்லதுணை நீஇருக்க
வேறுதுணை ஏன்எனக்கு வேற்காடு கருமாரி
—வேற்காட்டில்

—:0:—

## சுருதியோடு இசைஞானம் தருவாயம்மா

சுருதியோடு இசைஞானம் தருவாயம்மா - அம்மா
சுகமான சங்கீதம் நிறைவாயம்மா

—சுருதியோடு

பொருளோடு உனைப்பாட அருள்வாயம்மா - நல்ல
பொன்போன்ற தாமரையில் அமர்வாயம்மா

—சுருதியோடு

நாள்தோறும் உனைப்போற்ற மனம்வேண்டுமே - எமது
நாவினில் கலைவளர நலம்வேண்டுமே
ஆய கலையனைத்தும் தரவேண்டுமே - நல்ல
தூய உள்ளமதில் வரவேண்டுமே

—சுருதியோடு

-: o :-

## சூலாயுதம் கொண்ட வேலாயுதன் தாயே

சூலாயுதம் கொண்ட வேலாயுதன் தாயே
நூலாயிரம் படைக்க வாயேன் - உன் புகழ்
நூலாயிரம் படைக்க வாயேன்

—சூலாயுதம்

உன்னருள் தினம்வேண்டி உன்கோயில் வலம்வந்தேன்
என் நாவில் அமர்வாயே - நீ
என்-இசை நீகேட்டு உன்னருள் நீ தந்தால்
நல்வினைப் பயனே அம்மா

—சூலாயுதம்

அருள்கோடி இருந்தாலும் பொருள்கோடி
கொண்டபாடல்
என் மனம் தருவாயே - நீ
என்மனம் தினம்தங்கி உனைவலம் வந்திடவே
அருள் நலம் புரிவாயே - நீ

—சூலாயுதம்

—: o :—

## சுருதியோடு உறவாடும் கலைவாணி நீ

சுருதியோடு உறவாடும் கலைவாணி நீ - நல்ல
சுகமான சங்கீதம் தருபவள் நீ

—சுருதியோடு

வீணையில் விளையாடும் விரல்களம்மா—அதில்
விதம் விதமாய் வருமே சுரங்களம்மா

—சுருதியோடு

வெள்ளைத் தாமரையில் குடியிருப்பாய் - உயர்
கல்வியைக் கற்பவர்க்குத் துணைவருவாய்
புத்தகம் மணிமாலை கையில்கொண்டாய் - நல்ல
வித்தகக் கலையளிக்க எண்ணம் கொண்டாய்

—சுருதியோடு

—: o :—

# மதுராந்தகத்துக்கு வாருங்கள்

மதுராந்தகத்துக்கு வாருங்கள் - அன்னை
மகிஷாசுர மர்த்தனியைப் பாருங்கள்
மனம் திறந்து குறையெல்லாம் சொல்லுங்கள்
மகிழ்வுடனே தீர்த்திடுவாள் பாருங்கள்
—மதுராந்தகத்துக்கு

தீராத வினைகளையும் தீர்த்திடுவாள்—தினம்
வாராத புகழ்தனையும் சேர்த்திடுவாள்
பாராத முகங்களையும் பார்த்திடுவாள்—என்றும்
சேராத மனங்களையும் சேர்த்திடுவாள்
—மதுராந்தகத்துக்கு

தாயாக நினைப்பவர்க்குத் தாயாகுவாள்—அன்பு
சேயாக நினைப்பவர்க்குச் சேயாகுவாள்
காயான மனங்களையும் கனியாக்குவாள்—நல்ல
கருணை விழிகளிலே அருள் தேக்குவாள்
—மதுராந்தகத்துக்கு

—: o :—

## நேயம்கொண்ட மாந்தர்களை நெமிலி அழைக்குது

நேயம் கொண்ட மாந்தர்களை நெமிலி அழைக்குது
—அன்னை

பாலாவாம் சுந்தரியை வணங்க அழைக்குது
மணியான மண்டபத்தில் தேவிவாழ்கிறாள் - அவளை
மனங்குளிரப் பாடிவந்தால் வாழ்த்தி நிற்கிறாள்
— நேயம்

ஆற்றின்கரை ஓரத்திலே அவளது வீடு - உன்
ஆற்றாமை அற்றுப்போக அவளையே தேடு
பொற்றாமரைத் திருப்பாதம் அதனையே நாடு - நீ
சற்றேனும் மறவாமல் அவள்புகழ் பாடு
—நேயம்

வேதஒலி நிறைந்துநிற்கும் நாதமண்டபம் - தாய்
பாதமலர் பணிந்திட்டால் காக்கும்மண்டபம்
அலைகள்போல கலைகளெல்லாம் நிறைந்தமண்டபம் -நம்
கவலையெல்லாம் போக்கிநிற்கும் கருணைமண்டபம்
—நேயம்

பூவாடை போர்த்திநிற்கும் புவனநாயகி - நம்
புவனமெல்லாம் செழிக்கவந்த அருள் நாயகி
புரட்டாசி நவராத்திரி போற்றும் நாயகி - இந்தப்
பூவுலகம் போற்றிவரும் புகழ் நாயகி
—நேயம்

—: o :—

# காவிரியின் கரையழகாம்

காவிரியின் கரையழகாம் கரையோரம் வீடழகாம்
வீட்டுக்குள்ளே தேவிமாரி இருக்கிறாள் - அன்பர்
வேண்டும்வரம் தந்துநம்மை வாழ்த்துறாள்
—காவிரியின்

சமயபுரத்தழகி சங்கரனின் துணையழகி
சமயத்தில் வந்துதேவி காக்கிறாள் - உயர்
சங்கடங்கள் தீர்த்துஅருள் புரிகிறாள்
—காவிரியின்

கருநீல மேனிகண்ணன் மாலின்தங்கை மாரியவள்
கோலவிழி கொண்டுநம்மைக் காக்கிறாள் - காத்துக்
காலமெல்லாம் இன்பம்பல சேர்க்கிறாள்
—காவிரியின்

சொக்கும் விழியழகி சொக்கநாதன் துணையழகி
சொல்லும் சொல்லில் தேவியவள் வருகிறாள் - வந்து
சோர்வுநீக்கி சொர்க்கத்தையே காட்டுறாள்
—காவிரியின்

மஞ்சள் முக அழகி மருகனின் தாயழகி
தஞ்சமென்று வந்தவரைக் காக்கிறாள் - காத்து
அஞ்சாமல் வாழவழி செய்கிறாள்
—காவிரியின்

நாகக் குடையழகி நல்ல முத்துப்பேரழகி
நாடும்அன்பர் மனம்வந்து சேர்கிறாள் - சேர்ந்து
நல்லபல வழிகளைக்காட்டுறாள்.

—: o :—

# குன்றம் வாருங்கள்

குன்றம் வாருங்கள் - கழுக்குன்றம் வாருங்கள்
கழுகுருவில் மாமுனிகள் வந்து பாருங்கள்
—குன்றம்

சுந்தரி பாருங்கள் திருபுரசுந்தரி பாருங்கள்
மலைகள் வடிவினில் மந்திரம் வணங்குது வந்து
பாருங்கள்
பாடிப் பாருங்கள் நாமம் கூறிப் பாடுங்கள்
ஓடிடும்வினைகள் இதுவே உண்மை நீங்கள் பாருங்கள்
—குன்றம்

ஆடிப்பூரம் கல்யாணம் நீங்கள் பாருங்கள்
ஓடிவரும் தேர்கள் அழகை வந்து பாருங்கள்
சங்குமுளைக்கும் திருக்குளத்தில் மூழ்கிப் பாருங்கள்
தங்கிடும் வினைகள் மங்கிப்போகும் நீங்கள் பாருங்கள்
—குன்றம்

மறையின் வடிவில் ஈசன் மலைமேல் வந்து பாருங்கள்
மனமேஎன்றும் அவன்மேல் லயித்திடும் நீங்கள்
பாருங்கள்
நால்வர்புகழ்ந்த குன்றம்காண விரைந்து வாருங்கள்
நலமேவிளைந்திடும் ஜெயமேநிறைந்திடும் நீங்கள்
பாருங்கள்
—குன்றம்

தேவியின்மார்பில் ஸ்ரீசக்கரம் நீங்கள் பாருங்கள்
பாசம்அங்குசம் சேர்ந்தேகாக்கும் கைகள் பாருங்கள்
பாலும் தேனும் நிறையும்தேவி பாதம் பாருங்கள்
பாவவினைகள் பறந்தேபோகும் நீங்கள் பாருங்கள்
—குன்றம்



—:o:—

# அங்கமெல்லாம் தங்கமாக்கும்

அங்கமெல்லாம் தங்கமாக்கும் சக்திசன்னதி - அவளை
அங்கவலம் வந்தாலே பெரும்நிம்மதி
—அங்கமெல்லாம்

ஆண்டிலே நாள்தோறும் அலங்காரம் - அவளை
வேண்டிடவே தொலைந்திடும் நம்அகங்காரம்
—அங்கமெல்லாம்

சித்திரை மாதத்திலே சிங்காரத் திருவிழா - சக்தி
பத்தரை மாற்றுதங்கம் பௌர்ணமி பெருவிழா
ஆடிமாதம் பூரத்திலே அழகு திருவிழா - நம்
அகங்குளிர அமைந்திடுமே அன்புப் பெருவிழா
—அங்கமெல்லாம்

புரட்டாசி நவராத்திரி புண்ணியத் திருக்கோலம்
- சக்தி
அரசாட்சி செய்திடவே தாங்கினாள் அருட்கோலம்
வேதங்கள் ஒலிமுழங்க நடந்திடும் பெரும்வேள்வி
- அவளை
அலசிட நமக்கேது ஐயமான வெறும்கேள்வி
—அங்கமெல்லாம்

—: o :—

# மருவத்தூரின் மண்ணின் பெருமை

மருவத்தூரின் மண்ணின் பெருமை சொல்லி
முடியுமா - சக்தி
அருள்தனைப் பேசாமல் இருக்க முடியுமா
அங்கவலம் வந்தாலே அருளும் சன்னதி - உடலைத்
தங்கமயம் ஆக்கிடுமே சக்தி சன்னதி
—மருவத்தூரின்

பேசும்தெய்வம் சக்தியென்று போற்றி வருகிறோம்
—தினம்
பேசும்போது சக்திபேச்சைக் கேட்டு வருகிறோம்
சாதிமத பேதமின்றிக் கூடிவருகிறோம் - அவளை
ஓதிதினம் அருளைப்பெற்று வாழ்ந்து வருகிறோம்
—மருவத்தூரின்

ஆடிப்பூரம் விழாக்காண நடந்து வருகிறார் - மாந்தர்
பாடியாடி மகிழ்ந்து போற்றி நாடிவருகிறார்
சக்தி சக்தி சக்தி என்ற பெரும் கோஷமே - அவளைச்
சத்தியமாய் தொழுதுநின்றால் இல்லை தோஷமே
—மருவத்தூரின்

அனுதினமும் அற்புதங்கள் ஆயிரந்தானே - இங்கு
அவள் புகழைப் பாடப் பெரும் பாயிரந்தானே
சித்தர்பீடம் தன்னில் சக்தி அமர்ந்து வருகிறாள் - நம்
சித்தமெல்லாம் தெளிந்துபாட அருளைத் தருகிறாள்
—மருவத்தூரின்

## ஆடிஆவணி அடுத்து வரும் புரட்டாசி

ஆடிஆவணி அடுத்துவரும் புரட்டாசி - நாம்
அகம்மகிழ கொலுவிருப்பாள் மகராசி
இன்னிசையாய் நவராத்திரி வரும்நேசி - நம்
இன்னலென்றும் தீர்த்துவைப்பாள் சுகவாசி

—ஆடி

அன்னையவள் பெயரைச் சொன்னால் அமுதம் ஊறுது
தன்னைமறந்து பதம்பணிந்தால் செல்வம் பெருகுது
பாலும்தேனும் தேவிபாதம் தேடி சேருது
நாளும் நல்ல இன்னிசையாய்த் தந்து மகிழுது

—ஆடி

தேவியவள் மேனிதன்னை மலரும் தாங்குது
தேடிவரும் அன்பர்மனம் கண்டு மகிழுது
பாடிப்பாடி பணிந்திட்டால் பயமும் நீங்குது
நாடிதினம் கும்பிட்டால் நலனும் பெருகுது

—ஆடி

—: o :—

## ஆயிரம் நாமங்கள் கொண்ட அன்னை

ஆயிரம் நாமங்கள் கொண்ட அன்னை - அவள்
ஆட்சியிலே நம் புவி எல்லை
அன்புடன் துதித்தால் தொல்லையில்லை - அவள்
பேரழகே நம் இன்ப எல்லை

—ஆயிரம்

மஞ்சளில் குளித்து வந்திடுவாள் - தேவி
மகிமை பலவும் செய்திடுவாள்
குங்குமத்தில் தேவி குழைந்திடுவாள் - நம்
குறைகள் எல்லாம் களைந்திடுவாள்

—ஆயிரம்

சிங்கத்தின் மீதினில் அருள்வலமாம் - அதைக்
கண்டவர்க் கெல்லாம் பெரும் நலமாம்
சூலத்தைக் கைக்கொண்ட தேவியவள் - பால
சுப்ரமண்யனின் தாயுமவள்

—ஆயிரம்

—: o :—

## குங்கும நிறத்தினில் ஒரு சிரிப்பு

குங்கும நிறத்தினில் ஒரு சிரிப்பு - தாய்
குழைந்திடும் அழகே தனிச்சிறப்பு
கொஞ்சி மகிழ்ந்திட ஒருமொழியே - அது
குவிந்தே அழைத்திடும் தனி மொழியே

—குங்கும

கோபம் இல்லை அவளிடமே - நம்
தாபம் தீர்க்கும் அருள்மனமே
நேரம் என்ற ஒன்றினிலே - நம்
நிலையினை மாற்றிடும் அவளுருவே

—குங்கும

தாயவள் தலையினில் முல்லைச்சரம் - அது
தவழ்ந்தே அருளிடும் அன்புவரம்
நெற்றியிலே ஒருசிறு பொட்டு - அது
நேர்வழி காட்டிடும் நமைத்தொட்டு

—குங்கும

—: o :—

## எல்லையில்லா இன்பம் தரும் மாரியம்மா

எல்லையில்லா இன்பம்தரும் மாரியம்மா - எங்கள்
எல்லையின் நாயகியே மாரியம்மா

—எல்லையில்லா

கற்பனையின் திருவுருவே மாரியம்மா - உந்தன்
கடைக்கண் அருளிருந்தால் போதுமம்மா

—எல்லையில்லா

மண்ணிலே பிணிதீர்க்கும் மருந்தம்மா - நீ
மதுராந்தகம் அமர்ந்த விருந்தம்மா
அன்னையென்றால் போதும் நீயம்மா - நல்ல
அன்போடு வாழவைக்கும் தாயம்மா

—எல்லையில்லா

—: o :—

## ஊரெங்கும் பேர்மாறி உருவானவள்

ஊரெங்கும் பேர்மாறி உருவானவள் - மாரி
உலகோரைக் காத்திடவே தாயானவள்
கருநாக குடையமர்ந்து கருமாரியாய்த் - தேவி
கருத்தினிலே நிறைந்திருப்பாள் அருள்மாரியாய்
—ஊரெங்கும்

அன்னையவள் வாசலிலே வேம்பின்மணம் - என்றும்
அன்போடு நிறைந்திடுமே அன்பர் மனம்
மஞ்சளொடு குங்குமத்தில் நிதம்நிறைவாள் - நல்
மனமாறப் புகழ்ந்தாலே உளம் கரைவாள்
—ஊரெங்கும்

திருமாலின் திருத்தங்கை கருமாரி - நல்
திருச்சாம்பல் தனில் நிற்பாள் உருமாறி
ஆடியில் திருப்பூரம் அருள்தருவாள் - மாரி
நாடியே வந்தாலே நலம் தருவாள்
— ஊரெங்கும்

—: o :—

## அன்புருவில் அருள் வழங்கும் அழகுசுந்தரி

அன்புருவில் அருள்வழங்கும் அழகுசுந்தரி - ஐயன்
வேதகிரி நாதன்மகிழ் திருபுரசுந்தரி
—அன்புருவில்

சைவகுரு நால்வர்புகழ் திருக்குன்றமே - முனிவர்
கழுகுருவில் காட்சிதரும் கழுக்குன்றமே
—அன்புருவில்

ஆடிப்பூரம் தன்னில்தேவி மணக் கோலம்
நாடிவரும் அன்பர்மனம் நிறைந்திடும் கோலம்
பன்னிரண்டு ஆண்டினிலே சங்கு முளைத்திடும்
கண்ணிரண்டில் கண்டாலே மனமும் நிறைந்திடும்
—அன்புருவில்

ஐந்துபெரும் சிவலிங்கம் அருளைத் தந்திடும்
அழகுதேர்கள் ஐந்துமே பவனி வந்திடும்
சுரைந்து தீர்த்தங்களும் அங்கு நிறைந்திடும்
இன்பம் காண லட்சதீபம் அங்கு நடந்திடும்
—அன்புருவில்

—: o ;—

## வேதம் புகழ்ந்திடும் திருவேங்கடவா

வேதம் புகழ்ந்திடும் திருவேங்கடவா
நாதம் இசைத்திடும் நின்திரு நாமம்
அலர்மேல் மங்கை அவளொரு பாகம்
மலர்மகள் மகிழும் மன்னவன் பாதம்

—வேதம்

மக்கள் வணங்கிட மலைகள் ஏழு
மன்னவன் வாழும் மலையும் ஏழு
இசையில் இனிமை ஸ்வரங்கள் ஏழு
இகபர சுகம்தரும் மலைகள் ஏழு

—வேதம்

பொன்னும் மணியும் குவியும் சன்னதி
மண்ணும் பொன்னாய் மாறும் சன்னதி
மாலவன் மகிழும் மாதவன் சன்னதி
நீலமேக வண்ணன் நின்றிடும் சன்னதி

—வேதம்

—: o :—

# கலியுக வரதன் ஸ்ரீ கோவிந்தனாய்

கலியுக வரதன் ஸ்ரீகோவிந்தனாய்க்
காட்சியளிப்பது திரு மலையிலே

-கலியுக

திருமகள் உடனுறை திருமலை வாசனே
மரகத வண்ணனே ஸ்ரீவெங்கடேசனே

-கலியுக

உலகம் உய்ந்திட உன்திரு ம
உன்திருக் கரங்களில் சக்குசக்ரம் நின்றது
ஏழுமலை மேலே எங்கள் பெருமானாய்
எல்லோரும் வணங்கிடும் எங்கள்குல தெய்வமாய்

—கலியுக

செல்வமே நிறைந்திடும் உன்திருச் சன்னதி
செல்வத் திருமகளே உன்பெரும் நிம்மதி
தன்னந் தனியாகித் தனிப்பெருந் தெய்வமாய்
மண்ணையும் பொன்னாக்கும் மாமலை வாசனாய்

—கலியுக

—: o :—

## ஏழுமலை வாழ்ந்திருக்கும் மாமலைவாசன்

ஏழுமலை வாழ்ந்திருக்கும் மாமலை வாசன் - அருள்
என்றும் பொங்கும் அதன்மேலே ஸ்ரீவெங்கடேசன்
அலர்மேலு மங்கையவள் மாமணாளனே - பொழுது
புலர்வதுவும் அமர்வதுவும் அவனருளாலே

—ஏழுமலை

புஷ்கரணி நீராடப் புண்யம் கிட்டுமே - நல்ல
புஷ்பம் சார்த்தி அர்ச்சித்தால் பொருளும் கிட்டுமே
அங்கவலம் வந்துநின்றால் அருளும்கிட்டுமே - அவன்
தங்ககவசம் காணஇரு கண்கள் மட்டுமே

—ஏழுமலை

பூபாள நேரமதில் சுப்ரபாதமே - அவன்
பாதார விந்தத்தின் அருள்போதமே
அடியார்கள் நாவதனில் நாதவடிவமே - நல்ல
படியெங்கும் மலையெங்கும் நாமவடிவமே

-ஏழுமலை

வானகமும் வையகமும் வணங்கிநிற்குது - அருள்
பானகமாய் அவன்நாமம் என்றும் இனிக்குது
அலர்மேலு மங்கையவள் தனிச்சன்னதி - அவன்
அகமென்றும் நாடிநிற்கும் தேவி சன்னதி

—ஏழுமலை

—: o :—

## கோவிந்தன் நாமம்சொல்ல கோடிநன்மையே

கோவிந்தன் நாமம் சொல்ல கோடி நன்மையே - அழகு
கோகுலத்தில் கண்ணனாகி நின்ற தெய்வமே
சீரான செல்வம்தரும் ஸ்ரீனிவாசனே - இந்தப்
பாரளந்து மாமலைமேல் வாழும் மன்னனே

இருமாதர் மார்பினிலே அழகூட்டுவார் - நம்
இருவினைகள் தீர்வதற்கு வழிகாட்டுவார்
செல்வம்செழிக்கும் ஏழுமலை என்றுசொல்லுவார்
- தினம்
நல்லவர்கள் நாடிவந்தால் வாழ்த்துசொல்லுவார்
—கோவிந்த

வைரமுடி தலையில்சூட அலங்காரமே - அதைப்
பார்த்தவுடன் பறந்திடும் நம் அகங்காரமே
வேதமது நாதமாகி வலம் வருகுது - அருள்
போதமாகி இன்னிசையைத் தந்து மகிழுது
—கோவிந்தன்

அடியவர்கள் நெஞ்சினிலே குடிவருவானே - அவன்
படியேறி வருவோர்க்கு அருள்புரிவானே
வானளாவி வரவேற்கும் அழகுகோபுரம் - அங்குப்
போனவுடன் பிறந்திடுமே பெரும்பாயிரம்
—கோவிந்தன்

—: o :—

# சீர்பெருக்கும் 'ஸ்ரீதேவி' உறைமார்பனே

சீர்பெருக்கும் 'ஸ்ரீதேவி' உறைமார்பனே - இந்தப்
பார்காத்து நலமருளும் குணசீலனே
பார்த்தனுக்குத் தேரோட்டிப் பாடம் சொன்னவா
- அருள்
கார்மேகக் கண்ணனாகி கீதைதந்தவா
—சீர்பெருக்கும்

தீராத வினைதீரும் திருப்பதியிலே - எதிர்
பாராத வழிபிறக்கும் பெரும்பதியிலே
கோடான கோடிபக்தர் திருமலையிலே - அருள்
கோராத நாளில்லை உந்தனெதிரிலே
—சீர்பெருக்கும்

நலம்சேர்க்க உண்டுஉந்தன் நாமாவளி - பார்வைப்
பட்டவுடன் பறந்திடும் மனச்சூறாவளி
நறுமணத்தால் நிறைந்திடுமே உந்தன்சன்னதி-என்றும்
பொறுப்புடனே பற்றிநின்றேன் சரணாகதி
—சீர்பெருக்கும்

—: o :—

# பச்சை மரகத திருமலையே

பச்சை மரகத திருமலையே- அங்குப்
பவளச்செவ்வாய் கண்ணன் எழிற்சிலையே
என்றும் சன்னிதி அருள்நிலையே - தினம்
ஏழுமலை வளரும் பெரும்கலையே

—பச்சை

காலையில் தருவான் புகழ்கோலம் - அந்த
வேளையில் வந்திடும் பூபாளம்
அனுதினம் கோயில் திருக்கோலம் - நல்
அடியார்க்கு அருளும் அருட்கோலம்

-பச்சை

உலகினில் உயர்ந்த செல்வமகன் - அருள்
உதவிகள் புரிவதில் நல்லமகன்
திருமகளை மணந்த மணமகன் - உயர்
திருவருளைத் தரும் குணமகன்

—பச்சை

—: 0 :—

# தேனினும் இனியது ராமநாமம்

தேனினும் இனியது ராம நாமம் - அவன்
கதையிலும் சிறந்தது ராமநாமம்

—தேனினும்

அயோத்தியை ஆண்டது அவன்திரு நாமம்
ஆஞ்சநேயன் வணங்கும் அருள்திரு நாமம்

—தேனினும்

சிந்தை மகிழ்ந்திட அவன்திரு நாமம்
சீதா தேவியின் சிங்காரத் திருநாமம்
உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் உன்னத நாமம்
உலகோரை உய்விக்க வந்ததிரு நாமம்

—தேனினும்

—:o:—

## மதுராந்தகத்திலே ஸ்ரீ ராமர் சன்னிதானம்

மதுராந்தகத்திலே ஸ்ரீராமர் சன்னிதானம் - நல்ல
மன நிறைவளித்திடும் மங்கள சன்னிதானம்
—மதுராந்தகத்திலே

ஏரியின் பெயராலே திருப்பெயர் உருவாகும்
மாரியின் அருளாலே ஏரியும் நிறைவாகும்
—மதுராந்தகத்திலே

விபண்டகமுனிவர் ராமனை கண்டதலம் - புஷ்ப
விமானத்தில் ஸ்ரீராமர் இறங்கிய திருத்தலம்
உடையவர் நமஸ்காரம் உயர்வாய் நடந்ததலம்
உலகினை உய்விக்க வந்தது இத்தலம்
—மதுராந்தகத்திலே

வகுளாரண்யம் என்ற வைணவத்திருத்தலம்
திருவெண்காடு என்ற சைவத் திருத்தலம்
இரண்டுமே ஒன்றாகி இணைந்த பெருந்தலம்
நான்மறை உருவான நாரணன் திருத்தலம்
—மதுராந்தகத்திலே

—: o :—

# மணியான பாடல்கள் பாட வேண்டும்

மணியான பாடல்கள் பாட வேண்டும் - அது
மணிகண்டன் மீதிருக்க வேண்டும்

—மணியான

துணையாக அவன் இருக்க வேண்டும் - சபரி
மலையேற அருள்செய்ய வேண்டும்

—மணியான

நடுக்காட்டில் துணையாகவேண்டும் - நல்ல
வழிகாட்டியாய் இருக்க வேண்டும்
அவன் நாமம் நாம் சொல்ல வேண்டும் - திரு
அருள் தேட வழிசெய்ய வேண்டும்

—மணியான

இருமுடியை நாம்சுமக்க வேண்டும்-நம்
இருளென்றும் அவன் போக்கவேண்டும்
சரணங்கள் நாம் பாட வேண்டும்-ஐயன்
சரணார விந்தத்தை நாம் தேட வேண்டும்

—மணியான

—: o :—

## கற்பூர ஜோதி ஒன்று ஒளிவீசுது

கற்பூர ஜோதிஒன்று ஒளிவீசுது - அது
கந்தன் தம்பி மணிகண்டன் புகழ்பேசுது
காந்தமலை ஜோதியொன்று ஒளிவீசுது - அது
கருணைதெய்வம் ஐயப்பன்தான் என்றுசொல்லுது
—கற்பூர

இருமுடிகள் தலைமீது பவனிசெல்லுது - அது
இருவினைகள் தீருமென்று முரசொலிக்குது
முற்றிய தேங்காயினில் நெய் செல்லுது - அது
முக்தியே கிடைக்குமென்று முன் சொல்லுது
—கற்பூர

பக்தர்கள் கூட்டமென்றும் பரிமளிக்குது - அது
பம்பாநதிக் கரையினிலே குளித்துசெல்லுது
தீந்தமிழில் திருப்புகழைப் பாடிச்செல்லுது - அது
திவ்யதரிசனம் தன்னைக் காணக் செல்லுது
—கற்பூர

## கார்த்திகை மாதம் மாலையைப் போடு

கார்த்திகை மாதம் மாலையைப்போடு - நம்மை
காத்திடும் ஐயப்பன் அருளோடு
காலையும் மாலையும் சரணம்பாடு - நம்
கன்னிமூல கணபதி துணையோடு

—கார்த்திகை

அடியார் திருக்கூட்டம் பாட்டோடு - சென்று
ஐயனைக் காணும் பணிவோடு
தலைமேல் இருமுடிகள் நெய்யோடு - அது
தந்திடும் திருக்காட்சி அவன்மெய்யோடு

—கார்த்திகை

அழகனவன் மலையில்என்றும் பெருங்கூட்டம் - ஜோதி
தரிசனம் தனைக்காணக் கொண்டாட்டம்
பெருவழிப் பாதையில் வழிசிறக்கும் - அவன்
பேரருள் தனைவேண்ட விழிதிறக்கும்

—கார்த்திகை

—:o:—

## சபரிமலை நாடு நீ சாஸ்தாவைப் பாடு

சபரிமலை நாடு நீசாஸ்தாவைப் பாடு
சந்ததம்நாமம் சொல்லிடுமடியார் கூட்டமே நீகூடு
—சபரிமலை

கார்த்திகை மாதம் மலையதுபோக மாலையை நீபோடு
காலையும் மாலையும் கனிவுடன் ஐயன் சரணம் நீபாடு
—சபரிமலை

சபரியின் மலைமேல் அழகாயிருக்கு அவனது திருவீடு
சத்தியம் அவனே என்றேசொல்லி அவனைநீநாடு
அர்ச்சனை செய்து ஆயிரம்மலர்கள் அன்பாய்நீபோடு
ஆண்டவன் பதமே அருளைத் தருமே அனுதினம் நீதேடு
—சபரிமலை

இருமுடிகோடி இன்பமேதேடி ஐயனைவரும் நாடி
திருப்படியேறி தினமேகூடிடும் அன்பெனும் புகழ்பாடி
அவனதுசன்னதி வாயில்என்னும் நெய்யால் மணம்
-வீசும்

அவன்திருவிழிகள் அடியார்க்காக அருளால்
தினம்பேசும்
—சபரிமலை

—: o :—

## சரணத்தின் துணையாகும் சுகநாதங்கள்

சரணத்தின் துணையாகும் சுகநாதங்கள் - அவை
சாஸ்தாவைத் தினம்பாடும் சங்கீதங்கள்
ஸ்வரம் ஏழும் இசையாகும் அற்புதங்கள் - என்றும்
சுகமாக தான்பணியும் பொற்பதங்கள்

—சரணத்தின்

அருளாளன் திருக்கரத்தில் சின்முத்திரை - அது
அழகாக பொருளுரைக்கும் திருமுத்திரை
நெய்யோடு அபிஷேகம் தினம் மணக்கும் - அவன்
மெய்யோடு அதுசேர புவிசிறக்கும்

—சரணத்தின்

பந்தளக் குழந்தைக்குச் சந்தன அலங்காரம் - இந்தப்
பார்புகழ் செல்வனுக்குப் புலியுடன் பரிவாரம்
அனுதினம் அவன்பெயரால் நடக்குது அன்னதானம்

—இந்த

அவனியில் சிறந்தது ஐயப்பன் சன்னிதானம்

—சரணத்தின்

—:o:—

# மலைமீது மணிகண்டன் திருக்கோலமே

மலைமீது மணிகண்டன் திருக்கோலமே - என்றும்
மகிழ்வோடு அருளைத்தரும் எழிற்கோலமே

—மலைமீது

அடியார்கள் தலைமீது முடிக்கோலமே - அது
படியேறி புகழ்பாடும் தவக்கோலமே

—மலைமீது

ஐயனின் அண்ணனுக்கு முகமாறுதான் - அந்த
முகம்தன்னில் திருக்கண்கள் ஈராறுதான்
சபரிமலைப் படிகள் மூவாறுதான் - என்றும்
சந்தோஷ விரதநாட்கள் எண்ணாறுதான்

—மலைமீது

வழியெங்கும் திருநாமம் தினம் கேட்குமே - நெறி
வழுவாத நிலைதன்னை அது சேர்க்குமே
புவிமீது அறம்செழிக்க வழிகாட்டுமே - ஐயன்
புன்னகைத் திருமுகமோ அருள்கூட்டுமே

—மலைமீது

—: o :—

# சபரிமலை மேலமர்ந்த யோகநாதனே

சபரிமலை மேலமர்ந்த யோகநாதனே - உயர்
சங்கடங்கள் தீர்த்தருளும் சாந்தநாதனே
பதினெட்டுப் படிகள்கொண்ட பம்பைநாதனே
- உனைக்
கதியென்று வருவோரைக் காக்கும் நாதனே
—சபரிமலை

நாதமுள்ள கீதம் தரும் நாகரூபனே - அருள்
போதமதை அள்ளித்தரும் பாலரூபனே
புலியிலேறி புவனமாளும் புண்யரூபனே - இந்தக்
கலியில்வினை நீக்கவந்த காந்தரூபனே
—சபரிமலை

ஞானநிலை தந்தருளும் ஞானபோதனே - உயர்
ஞானியாக வந்தமர்ந்த யோக சீலனே
சத்யதர்மம் வழிவகுத்த சத்யசீலனே - சர்வ
சக்தியவள் மனங்கவர்ந்த நித்ய பாலனே
—சபரிமலை

—: o :—

# உந்தன்பாடல் எந்தன்நாவில்

உந்தன்பாடல் எந்தன்நாவில் உருபெறவேண்டும்
- தினம்
உனது காட்சி எனதுமனதில் நிலைபெறவேண்டும்
—உந்தன்பாடல்

துளசிமணி மாலையதை அணிந்திடவேண்டும்- நெற்றித்
துலங்கிடவே சந்தனத்தைப் பூசிடவேண்டும்
—உந்தன்பாடல்

சபரிமலை நோக்கிகால்கள் நடந்திடவேண்டும்
-வழியில்
சரணகோஷம் பாடிப்பாதைக் கடந்திடவேண்டும்
இன்னல்நீக்கும் இருமுடியைச் சுமந்திட வேண்டும்
- அதை
இன்பமுடன் ஐயாஉனக்குத் தந்திடவேண்டும்
—உந்தன்பாடல்

பதினெட்டுப் படிகள்மீது ஏறிடவேண்டும் - என்
விதியனைத்தும் உன்னிடத்தில் மாறிடவேண்டும்
உலகனைத்தும் உன்னருளால் தேறிடவேண்டும்
—என்றும்
உத்தமர்கள் உன்புகழைக் கூறிடவேண்டும்
—உந்தன்பாடல்

—:o:—

# படிஅழைக்குது ஐயனைப்பாட அழைக்குது

படிஅழைக்குது ஐயனைப்பாட அழைக்குது
சத்தியமான பொன்னுபதினெட்டுப் படி அழைக்குது
நம்மைப் பாட அழைக்குது
—படி

கோடிமுறை நாமம்சொல்ல நாவினிக்குது - அவனைக்
கூடிதினம் தொழுதிடவே வாழ்வினிக்குது
—படி

பாயும்பம்பை நதியினிலே அருள்சுரக்குது - அதில்
பணிவுடனே குளித்தாலே வினையறுக்குது
காட்டுவழியில் மேட்டுபள்ளம் நிறைந்திருக்குது - சபரி
மேட்டுமலையில் ஐயன்முகம் மலர்ந்திருக்குது
—படி

கார்த்திகையில் மாலைபோடக் கனிவுபிறக்குது - நல்ல
மார்கழியில் மலைப்பயணம் மகிழ்வைச் சுரக்குது
தைமாதம் முதல்தேதி ஜோதிதெரியுது - நாம்
கையெடுத்துக் கும்பிட்டால் கருணை புரியுது
—படி

—: o :—

## சின்னஞ்சிறு குழந்தையொன்று

சின்னஞ்சிறு குழந்தையொன்று சிரித்திருக்குது - அது
சிங்காரமாய்ப் புன்னகைத்து நம்மையழைக்குது
சத்தியமான பதினெட்டுப் படியிலிருக்குது - அழகு
சாஸ்தாவாய் கொலுவிருந்து உலகைக்காக்குது
—சின்னஞ்சிறு

மணிகண்டன் நாமம்சொல்லி மாலையணிகிறார் - அன்பர்
காலைமாலை குளித்துதினம் சரணம்சொல்கிறார்
மண்டலத்து விரதமதில் மனமும்மகிழ்கிறார் - அழகு
மலையில்வாழும் தெய்வம்கண்டு தன்னைமறக்கிறார்
—சின்னஞ்சிறு

பாயும்பம்பை நதியுங்கூட சரணம்சொல்லுது - அது
பார்புகழும் குழந்தையவனைப் போற்றித்துதிக்குது
கற்பூரமோ ஒளியைவீசி ஐயனைக்காணுது - அவன்
பொற்பதத்தை நாளும்வேண்டி தானும்கரையுது
—சின்னஞ்சிறு

ஸ்வாமிமார்கள் சரணம்சொல்லிப் பாதைகடக்கிறார்
— உயர்
பந்தளத்து குழந்தையவனைப் பார்த்துநடக்கிறார்
இருமுடியில் நெய்தேங்காய் கொண்டுசெல்கிறார்
—ஐயன்
மெய்நிறைய நெய்மணக்க பூஜைசெய்கிறார்
—சின்னஞ்சிறு

—: o :—

## சரணகோஷம் பாடப்பாட சந்தோஷம்

சரண கோஷம் பாடப்பாட சந்தோஷம் - நாம்
சபரிமலை போனால் போகும் நம்தோஷம்
மாலையணிந்து புகழ்பாட மனம்விரும்பும் - தினம்
காலைமாலை கோயில்செல்ல அருள் ததும்பும்

—சரணகோஷம்

பம்பைநதி நீராடப் பாவம் பறக்கும்
பாலனவன் புகழ்பாடத் தமிழ் சிறக்கும்
இன்னிசையோ அவன் புகழைத் தினம் பெருக்கும்
இன்னலென்றும் தீர நல்ல வழி பிறக்கும்

—சரணகோஷம்

சபரிமலை நாதனுக்கு இருமுடி கட்டு
சங்கடங்கள் தீருமவன் பார்வைகள் பட்டு
திருவருளை வேண்டிதினம் பாதங்கள் தொட்டு
திருச்சன்னதி காணநீயும் திருநடை கட்டு

—சரணகோஷம்

—: o :—

## பதினெட்டுப் படி ஏற வேண்டும்

பதினெட்டுப் படி ஏறவேண்டும் - அங்குப்
பந்தளக் குழந்தையின் முகம்காண வேண்டும்
—பதினெட்டு

மண்டலம் நோன்பிருக்க வேண்டும் - நாம்
மணிகண்டன் புகழ்பாடி மலை ஏற வேண்டும்
குறையெல்லாம் அவன் தீர்க்க வேண்டும் - இந்தக்
குவலயம் தன்னில் அவன் ஒளிவீச வேண்டும்
—பதினெட்டு

பம்பைநதிக் கரையோரம் போக வேண்டும் - நம்
பாவமெல்லாம் அங்குதானே கரைந்தாக வேண்டும்
கருணைவள்ளல் கந்தன் தம்பி முகம்காண வேண்டும்
கற்பூர ஜோதி கண்டு மனம்குளிர வேண்டும்
—பதினெட்டு

—: o :-

# ஐயப்பனைக் காணகாண ஆவல் பிறக்குது

ஐயப்பனைக் காணகாண ஆவல்பிறக்குது - அவனை
நெய்யோடு கண்டவுடன் மேனிசிலிர்க்குது
—ஐயப்பனை

கார்த்திகையில் மாலைபோட மனமும் துள்ளுது-கால்கள்
பாரளந்த மாயன்மகனைக் காணச்செல்லுது
இருமுடியை ஏற்கத்தலைகள் இன்பம் கொள்ளுது - அவன்
இன்னிசையைப் பாடப்பாட நாவும் சிறக்குது
—ஐயப்பனை

பம்பைநதியில் குளிக்கப்பாவம் பறந்து போகுது
பதினெட்டுப் படிகள் ஏறப் பணிவு பிறக்குது
அகிலமெலாம் சிறக்க ஐயன் அபிஷேகம்
அவன் காட்சி காண காண சந்தோஷம்
—ஐயப்பனை

—: o :—

# சபரிகிரி நாதனுக்குச் சரணம் போடுவோம்

சபரிகிரி நாதனுக்குச் சரணம் போடுவோம்
சாஸ்தாவின் சன்னதியில் ஒன்று கூடுவோம்
சங்கடங்கள்தீர அவன் புகழைப் பாடுவோம்
சந்ததமும் காத்துநிற்க அருளை வேண்டுவோம்
—சபரிகிரி

கார்த்திகையின் நல்ல நாளில் மாலை சூடுவோம்
காலைமாலை குளித்துதினம் கோயில் நாடுவோம்
மண்டலத்து விரதம்தன்னில் மனம் மகிழுவோம்
மணிகண்டன் மலர்முகத்தைக் கண்டு வணங்குவோம்
—சபரிகிரி

பம்பைநதி தீரம்சென்று பாவம் கரைப்போம்
நம்மை காக்கும் நாதன்புகழ் நன்று உரைப்போம்
பதினெட்டுப் படிகடந்தால் பாலன் தரிசனம்
பாலனவன் மலைமேலே ஜோதி தரிசனம்
—சபரிகிரி

—:0:—

## ஹரிஹர சுதன்நாமம் அமிர்தமய்யா

ஹரிஹர சுதன் நாமம் அமிர்தமய்யா - சபரி
நாதனைக்காண இன்பம் பெருகுமய்யா

—ஹரி

மண்டல நோன்பிருந்து செல்கையிலே - நம்
மணிகண்டன் புகழ்பாடி நடக்கையிலே

—ஹரி

இருமுடிகள் கோடிவரும் சபரிமலையிலே - நம்
இன்னலும் ஓடிவிடும் ஒருநொடியிலே
நெய்யென்றும் மணந்திடுமே அவன்மேலே - நம்
மெய்யெல்லாம் நிறைந்திடுமே அவனாலே

—ஹரி

விண்ணெங்கும் சரணகோஷம் எதிரொலிக்கும் - இம்
மண்ணெங்கும் அவனருளால் தலைசிறக்கும்
கண்ணென்றும் திருக்காட்சி பிரதிபலிக்கும் - நம்
எண்ணமென்றும் அவன்புகழைப் பாடிச்சிறக்கும்

—ஹரி

—: o :—

# அழகுசிவன் திருமகனூர் உறையும்மலை

அழகுசிவன் திருமகனூர் உறையும்மலை - நம்
ஆறுபடை நாயகனின் தம்பிமலை
சரணகோஷம் சந்ததமும் கேட்கும்மலை - நம்
சபரிகிரி ஐயப்பனின் அழகுமலை

—அழகுசிவன்

கார்த்திகையில் மாலைபோடக் கவரும்மலை
மார்கழியில் இருமுடியை அழைக்கும் மலை
மண்டலத்து விரதமிருக்க சொல்லும்மலை
மணிகண்டன் தனைக்காண அழைக்கும் மலை

—அழகுசிவன்

பாதையெங்கும் வன்புலிகள் வாழும் மலை
பாரளந்த மாயன்மகன் மகிழும் மலை
கற்பூர ஜோதிதன்னில் நிறையும் மலை
கற்பகமாய் கற்கண்டாய் இனிக்கும் மலை

—அழகுசிவன்

நெய்நிறையும் ஐயன்மேனி தாங்கும் மலை
மெய்யுருக்கும் அருட்காட்சி அளிக்கும் மலை
அண்டிவரும் அன்பர்களை காக்கும் மலை
ஐயப்பனே கொலுவிருக்கும் சபரிமலை

—அழகுசிவன்

—: o :—

# சபரிமலை நாதனையே காண வாருங்கள்

சபரிமலை நாதனையே காண வாருங்கள்
சாஸ்தாவின் புகழ்பாடி ஒன்று சேருங்கள்
நடைபாதை எங்குமவன் நாமம் பாடுங்கள்
படியேறி மலர் முகத்தைக் காணக் கூடுங்கள்

—சபரிமலை

நாம் சொல்லும் ஐயன் நாமம் இன்பமல்லவா
நம்மை நாடும் இன்பமென்றும் க்ஷேமமல்லவா
ஐயன் உள்ள அழகுமலை வேதமல்லவா
அண்டமதில் அவன் நாமம் நாதமல்லவா

—சபரிமலை

சந்தனமும் திருநீறும் நெற்றி நிறையுது
சத்திய மணிமாலை மார்பு நிறையுது
நெய் நிறைந்த தேங்காயோ முடி நிறையுது
பக்தர்களும் பாடிஏற படியும் நிறையுது

—சபரிமலை

நாதனவன் திருக்கரமோ சின் முத்திரை
அழகுமலர் பாதங்களோ யோக முத்திரை
அவனிசையைப் பாடப்பாட போகும் நித்திரை
அகிலமென்றும் சிறந்திடவே சபரி யாத்திரை

—சபரிமலை

# அழகு செழிக்கும் சபரிமலை

அழகு செழிக்கும் சபரிமலை சென்று வந்தால் ஐயப்பா
அடியவர்கள் நெஞ்சினிலே குடிவருவாய் மெய்யப்பா
நெய் நிறைந்த மேனிகொண்ட மெய்யுருக்கும் ஐயப்பா
பைமுடியில் மனம்நிறைந்து அருள்வழங்கும் மெய்யப்பா
—அழகு

நெற்றியிலே நீறணிந்து நெஞ்சுருக ஐயப்பா
பற்றவரும் துயர்களையும் தூயவனே மெய்யப்பா
அவனிபுகழ சபரிமலை மீதமர்ந்த ஐயப்பா
அனைவரையும் அழைத்துநலம் தந்தருளும் மெய்யப்பா
—அழகு

கருத்துடனே கார்த்திகையில் மாலைசூட ஐயப்பா
கருணைதனை அள்ளிதந்து காத்திடுவாய் மெய்யப்பா
காலைமாலை உந்தன்புகழைப் பாடதினம் ஐயப்பா
கால்நடையில் துணைநின்று கனிவுதரும் மெய்யப்பா
—அழகு

வன்புலிகள் மீதமர்ந்து வலம்வந்த ஐயப்பா
எண்ணமெலாம நிறைந்திருந்து ஏற்றம்தரும்
மெய்யப்பா
மண்ணென்றும் சிறந்திடவே சரணம்பாட ஐயப்பா
கண்பார்க்கும் இடமெல்லாம் காட்சிதரும் மெய்யப்பா
—அழகு

—: o :—

# குழந்தை தெய்வம் ஐயனைக்காண

குழந்தை தெய்வம் ஐயனைக்காணக் குருசரணம்
போட்டுவிட்டுக்
குறைகளெல்லாம் மறையநீங்க மாலை போடுங்கோ
குற்றமெல்லாம் பொறுத்தருள்வான் பாருங்கோ
—குழந்தை

ஐப்பசியை அடுத்துவரும் அழகான கார்த்திகையில்
அருட்பசியை போக்க நீங்க நாடி வாருங்கோ
அவனியிலே குறைநீங்கும் பாருங்கோ
—குழந்தை

அனுதினமும் காலைமாலை குளித்துசந்தனம் பூசிகிட்டு
அவன் சரணம் அன்புடனே கூடி பாடுங்கோ
அவன்மலை ஏற அருள்புரிவான் பாருங்கோ
—குழந்தை

அமுதைநதி பம்பாநதி அத்தனையும் புண்யநதி
அனைத்திலுமே ஆர்வமுடன் குளித்து வாருங்கோ
குளித்துவிட்டால் குறையில்லை பாருங்கோ
—குழந்தை

விளக்குபூஜை போட்டுநின்று விமரிசையாய் பாடி
நின்றால்
வினைகளெல்லாம் மறைந்து போகும் வாருங்கோ
விபூதியில் பிணிதீர்ப்பான் பாருங்கோ
—குழந்தை

அன்னதானம் செய்துவிட்டு அடியாரை வணங்கி நிற்க
அனைவரையும் காத்திடுவான் பாருங்கோ
அன்புடனே சபரிமலை வாருங்கோ

—குழந்தை

இருவேளை புகழ்பாடி இருமுடியைத் தலைசூடி
நெய்தேங்காய் கொண்டு நீங்க வாருங்கோ
மெய்சிலிர்க்கும் அவன் தரிசனம் பாருங்கோ

—குழந்தை

பதினெட்டுப் படியேறி பணிவுடனே கும்பிட்டால்
கதியென்று துணைவருவான் வாருங்கோ
கற்பூர ஜோதிதன்னைப் பாருங்கோ

—குழந்தை

அபயகரம் காட்டிஐயன் அழகுகோலம் பூண்டிடுவான்
பந்தளத்துக் குழந்தையவனைப் பார்க்க வாருங்கோ
பந்தபாசம் நீக்கி அருளை வேண்டுங்கோ

—குழந்தை

—:o:—

# சபரிமலை பாதையிலே சரணகோஷம் கேட்குது

சபரிமலை பாதையிலே சரணகோஷம் கேட்குது
சங்கரன்மகன் சன்னதியில் சாபமெல்லாம் போகுது
ஹரிஹரனே உந்தன் கோயில் அழகுடனே விளங்குது
ஐயப்பா என்றுசொன்னால் ஆனந்தமே பெருகுது
—சபரிமலை

ஐயனே உன்னைக்கண்டால் ஐயமெலாம் விலகுது
ஐங்கரனின் தம்பியானே அச்சமெலாம் போகுது
அவனருளை வேண்டி தினம் மனமென்றும் நாடுது
அவனேகதி என்று தினம் அவன்புகழைப்பாடுது
—சபரிமலை

பாலகனே உந்தன்பார்வைப் பரிவுடனே அழைக்குது
பம்பைநதிக் கரையினிலே பாவமெலாம் போகுது
மலைஏறி வந்தாலே மனமெல்லாம் நிறையுது
மணிகண்டன் சன்னதியில் மங்களமே திகழுது
—சபரிமலை

—: o :—

# சத்திய ஜோதியே நித்திய காட்சியாய்

சத்திய ஜோதியே நித்திய காட்சியாய்
தோன்றுது உந்தன் சபரியிலே
சங்கடம் தீருது சரணங்கள் கேட்குது
சங்கரன் மகனின் சன்னதியில்

—சத்திய

பாவங்கள் தீருது பாசங்கள் மறையுது
பம்பா நதியின் தீரத்தில்
பகையும் தொலையுது பந்தங்கள் போகுது
பாலகன் உந்தன் சன்னதியில்

—சத்திய

எரிமலை ஏற்றம் அடையும் போது
ஏகாந்த வாழ்வு இனிக்கிறது
தீராத வினைகளும் தீர்ந்து போகுது
தீப ஜோதியைக் கண்டவுடன்

—சத்திய

-: o :—

# மண்ணிலே சிறந்தது மதுராந்தகம்

மண்ணிலே சிறந்தது மதுராந்தகம் - அருள்
விண்ணவர் போற்றிடும் மதுராந்தகம்
—மண்ணிலே

மாரியவள் திருக்கோயில் விருந்தாகுமே - அருள்
மணமுள்ள திருச்சாம்பல் மருந்தாகுமே
—மண்ணிலே

நான்மறை ஓதிய நல்ல தலம் - உயர்
நாரணன் ராமனாய் வந்த தலம்
திருவெண்காடு என்னும் திருத்தலம் - என்றும்
திருவருள் தனைசேர்க்கும் அருட்தலம்
—மண்ணிலே

வைணவம் சைவம் வளர்ந்தஇடம் - ஸ்ரீ
வைஷ்ணவி தேவி வாழுமிடம்
ஆறுமுகன் அழகாய் அமர்ந்த இடம் - இந்த
அவனியிலே சிறந்து உயர்ந்தஇடம்
—மண்ணிலே

—: o :—

# பாபா எனும் தெய்வம்

பாபா எனும் தெய்வம் பாரினில் குருதெய்வம்
பண்பிலே முதலாகி பணிவினை தரும்தெய்வம்

—பாபா

அன்பினை முதலாக்கி ஆண்டிடும் தெய்வம்
அவனியில் அருள்சேர அவதரித்த தெய்வம்

—பாபா

அன்பருக்கு அருளை வழங்கிடும் தெய்வம்
அதிசயம் புரியும் அற்புத தெவம்
இருளினை நீக்கி ஒளிதரும் தெய்வம்
இன்பமே தினமருளும் இனியநல் தெய்வம்

—பாபா

சிந்தையில் மலரும் ஷீரடி தெய்வம்
வந்தனை செய்தாலே வாழ்த்திடும் தெய்வம்
எளிமையின் உருவில் வந்தநல் தெய்வம்
எல்லோர்க்கும் இனிதாய் ஏற்றநல் தெய்வம்

—பாபா

-: o :-

## ஷீரடி தலத்தில் தெய்வமுண்டு

ஷீரடி தலத்தில் தெய்வ முண்டு - சாயி
திருவடி பணிந்தால் நன்மையுண்டு
சாயிராம் என்றே பெயருண்டு - அருள்
சாந்தியை அருளும் மணமுண்டு

—ஷீரடி

ஆயிரம் அடியார் அவர்க்குண்டு - தினம்
அன்பினை பொழியும் குணமுண்டு
எளிதாய் அவரின் தோற்றமுண்டு - அவரை
ஏற்ருல் வாழ்வில் மாற்றமுண்டு

—ஷீரடி

அற்புதம் நிகழ்த்தும் கலையுண்டு - அவர்
பொற்பதம் பணிந்தால் நலமுண்டு
நாமங்கள் சொன்னுல் சுவையுண்டு - என்றும்
நலமே அருளும் சுகமுண்டு

—ஷீரடி

—:o:—

# சந்ததம் பாடுவோம்

சந்ததம் பாடுவோம் சாயிராம் நாமமே - நம்
சங்கடந் தீர்ந்திடும் சர்வமும் க்ஷேமமே

சந்ததம்

ஷீரடி திருத்தலத்தில் திருவடி பதிந்தது - அந்த
திருவடி தனில் தானே பேரருள் பொதிந்தது

—சந்ததம்

வாழ்த்திடும் திருக்கரம் வளர்த்திடும் பேரறம் - தினம்
வணங்கிடும் அடியார்க்கு தந்திடும் மனஉரம்
சூரியப் பேரொளி வீசிடும் திருமுகம் - நமக்கு
சுகமே தினம்தரும் அவரது திருமுகம்

—சந்ததம்

ஊரெது பேரது என்பது தெரியாது - பெரும்
உண்மையை அறியார்க்கு அவரை புரியாது
பாபாவை நினைத்தால் இன்பமே குறையாது - அவர்
பாதாரம் பணியாமல் வாழ்க்கையும் நிறையாது

—சந்ததம்

—: o :—

# கவிஞரைப் பற்றி...



திரு எம். வி. குமார் அவர்கள் 25-7-1951ல் ஏரி காத்த இராமனின் புகழ் பாடும் இனிய மதுராந்தகத்தில் வேதம்வல்ல ஸ்ரீ வெங்கட்ராம சாஸ்திரிகளுக்கும் ஸ்ரீமதி ருக்மணி அம்மாளுக்கும் திருமகனாகப் பிறந்தார். இவ்வூர் இந்து மேனிலைப் பள்ளியில் பள்ளி இறுதி வகுப்பு முடித்த இவர் ஒளி தரும் மின் துறையில் பணியாற்றி வருகிறார்.

உள்ளொளியிலும் ஈடுபாடு கொண்ட இவரின் கவிதைகள், கட்டுரைகள், நாடகங்கள், சிறுகதைகள், மெல்லிசைப் பாடல்கள், தினமணிச்சுடர், அமுதசுரபி, தினஇதழ், சப்தகிரி, குண்டூசி ஆகிய தின, வார, மாத இதழ்களிலும் வானொலியிலும் மணம் வீசி வருகின்றன. பல மொழிகளில் பயிற்சியுள்ள இவரது படைப்புக்கள் 'இலக்கிய வீதி', 'கவிதைப் பண்ணை' இந்து தமிழ்க் கவிஞர் மன்றம் ஆகியவற்றின் மூலம் வெளியாகி பலரது பாராட்டுக்களைப் பெற்று வருகின்றன. இவரது கவிதை ஓட்டம் கொத்தமங்கலம் சுப்பு அவர்களை நினைவு படுத்தும். பல அரங்குகளில் இவரது மெல்லிசை ஒலித்து வருகின்றன. ஆண்டுதோறும் சங்கரஜயந்தியைப் பக்தியுடன் கொண்டாடி வரும் இவரது பாடல்கள் HMV நிறுவனத்தினரால் திரு. வீரமணி அவர்களது குரல் மூலம் ஒலித்துக் கொண்டிருக்கிறது. இந்தத் தேன்மலர் இவருக்கு மேலும் பெருமை சேர்க்கிறது. வளரட்டும் இவரது இசைத்தொண்டு!

எஸ். ரகுவீரன்
செயலாளர்
கடுக்கலூர் திருமாலடியார் அருள்நெறி மன்றம்
4-7-88 84, ஜி. எஸ். டி. சாலை, மதுராந்தகம்.